# ஆண் - பெண்

[கதைகள்]

அகிலன்



பழனி பிரசுரம்

புதுக்கோட்டை :: திருச்சி-2. :: சென்னை-5.

முதற்பதிப்பு: ஆகஸ்டு, 1950.
இரண்டாம் பதிப்பு: அக்டோபர், 1952.
மூன்றும் பதிப்பு: டிசம்பர், 1957.

**விலை ரூ. 1—50.**

## ஆசிரியரின் பிற நூல்கள்

*சிறுகதைகள்:*

சக்திவேல்
நிலவினிலே
அமராவதிக் கரையில்
செங்கரும்பு
வழி பிறந்தது
மின்னுவதெல்லாம்
குழந்தை சிரித்தது

*நாவல்கள்:*

சிநேகிதி
இன்ப நினைவு
பெண்
துணைவி
சந்திப்பு
நெஞ்சின் அலைகள்
வாழ்வு எங்கே?

*நாடகம்:*

வாழ்வில் இன்பம்
புயல் (அச்சில்)

*கட்டுரைகள்:*

கலையும் வயிறும்

*மொழிபெயர்ப்பு:*

முழுநிலவு
எழுதாத கதை
தாகம்

---

அச்சிட்டோர்: செந்தமிழ்ப் பதிப்பகம், புதுக்கோட்டை.

# முன்னுரை

'ஆண் பெண் உறவு'—இது ஆழங்காண முடியாத சூத்திரம். காலம், இடம் முதலிய பேதங்களைக் கடந்து எல்லாக் காலத்திலும் எல்லாவிடத்திலும் நிலவுகிறது. மனித ஜாதியில் மட்டும் அல்ல; ஓரறிவுள்ள தாவரம் முதல் எல்லா உயிர்ப் பிராணிகளிடத்திலும் இருக்கிறது. ஆனால் இது ஒரே வகையா? அதுதான் இல்லை. உள்ளத்தில் இருக்கும் உறவும் உரையில் இருக்கும் உறவும் உடம்பில் இருக்கும் உறவும் வெவ்வேறு பெயரைப் பெறுகின்றன. காதல், காமம், பலாத்காரம், கைக்கிளை' பெருந்திணை, விபசாரம் என்று பல பெயர்களையும் பல்வேறு நிலையில் ஆண் பெண் உறவு பெறுகிறது. அத்தனை நிலைகளும் வாழ்வில் உண்டு. அவற்றில் உன்னதமானது காதல், அதை ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக உலக முழுவதும் கதையாகப் புராணமாகக் காவியமாகப் பாடிப் பாராட்டிப் போற்றிவருகிறது.

இந்தக் கதைத் தொகுதிக்கு 'ஆண் - பெண்' என்ற பெயர் வைத்திருப்பது மிகவும் பொருத்தம். ஆண்-பெண் இல்லாத கதையே இல்லை. ஆனால் ஒவ்வொரு கதையிலும் வரும் ஆணும் பெண்ணும் வேறு வேறு. ஆகவே அவர்களிடையே ஏற்படும் தொடர்பு வேறு வேறு வகையானது. வேறு வேறு வகையான பாத்திரங்களில் வேறு வேறு வகையான தொடர்பைப் பற்றிச் சொல்வதனால்தான் கதைகளில் வேறு வேறு நயங்கள் அமைந்திருக்கின்றன். 'அகிலன்' பரந்து கிடக்கும் உலகைக் கண்டு மனத்தில் வாங்கிக்கொண்டு சிந்தனையைத் தூண்டிக் கற்பனை யுலகத்தில் படர்கிறார். அவர் காட்டும் குறத்தி ரோஜா நினைக்க நினைக்க உள்ளத்தினூடே மணக்கும் மெல்லிய மலர். அவளைப் பற்றிய 'அகிலன்' வர்ணனைதான் எவ்வளவு அழகாக இருக்கிறது! 'அந்தக் குறத்தியை எங்ஙனம் நான் என்னுடைய சாதாரண வார்த்தைகளால் உங்கள் கண் முன்னே கொண்டு வந்து நிறுத்த முடியும்?—அவள் தெருப் புழுதியிலே நிற்கப் பிறந்தவளல்ல; கவிஞர்களின் மௌனக் கனவுகளிலே மட்டும் உலவ வேண்டியவள்' அவள் கதையில் வரும் ஆணாகிய கோவிந்தன் நெகிழ்ச்சியுள்ளம் படைத்தவன்; ஆனாலும் கோழை.

'இரவு பகல்' என்பதில் வரும் ஆண் சாமான்யமானவன்; மனத்தின் வசப்பட்டு நடப்பவன்; சபல சித்தமுடையவன்; அதில் வரும் சாந்தா நல்லவள்தான்; ஆனாலும் சந்தர்ப்ப பேதங்களால் சலனம் அடையும் உள்ளம் படைத்தவள்.

வாசஸ்பதியும் பாமதியும் காவிய நாயகர்களாகத் தக்கவர்கள். மணம் புரிந்துகொண்டும் அவர்கள் உறவு உடலை ஒட்டியதாக இருக்கவில்லை. இலக்கிய சிருஷ்டியில் ஈருடலும் ஓரறிவுமாக ஈடுபட்டிருந்தனர். அவர்கள் எழுதிய உரை முடிந்தது. அவர்களுடைய அழகு உடலளவில் போய்விட்டது. 'காற்றுக் கேட்டது:—உங்கள் அழகு எங்கே?' ஆம், புறக் கண்ணுக்கு அவர்கள் அழகு இல்லை. ஆனாலும் அவர்கள் அமரர்கள்; அழகு செறிந்தவர்கள். அவர்கள் சிறிய அழகைப் பலிகொடுத்துப் பெரிய அழகைப் பெற்றனர். அவர்கள் கதையை 'அகில'னுக்கு முன்பே பலர் எழுதியிருக்கிறார்கள். இன்னும் பலர் எழுதப் போகிறார்கள். இந்த ஆண் - பெண் உறவு எவ்வளவு உன்னதமானது! இந்தமைய உறவைத்தான் நித்தியப் பொருள்களோடு வைத்து எண்ணிப் பார்க்கிறது, கவிஞன் உள்ளம்.

'தீபாவளி வந்தது' என்ற கதையில் வரும் ஆண் சிவசங்கரன். அவருக்கு அன்பை உணரும் சக்தி இருந்தது. ஆனால் எல்லா அன்பையும் உணரும் கண் இல்லை. அவர் சென்றுபோன சீதாவின் உறவை உள்ளத்திற் பூசித்தார். முன் நிற்கும் சரஸ்வதியின் உறவைப் பார்க்கவே இல்லை; உணர்வது பிறகல்லவா? ஆனால் பெண்மை வென்றது; அன்பு வென்றது. '...சாதாரணமான பெண் அல்ல.....மூடியிருந்த என் கண்களைத் திறந்துவிட்டாய்' என்று சிவசங்கரன் சொல்லி உறவு பூண்கிறார்.

ரங்கசாமியும் அழகம்மாளும் இன்பத்தீயில் பலியாகிறார்கள். வீரம் செறிந்த ஆண் பெண்களாகிய அவர்களுடைய உறவை

நெருப்புச் சுடாது; உலகியல்பு ஒடுக்காது. ஏனெனில் அது உடம்புக்கு அப்பாற்பட்டது.

இப்படியே பின்வரும் மூன்று கதைகளிலும் வெவ்வேறு ஆண் பெண் வருகின்றனர். சமுதாய விலங்குகளைத் தறித்துக் கொண்டு வர ஆண் மனம் முந்துகிறது; பெண் மனம் அஞ்சுகிறது. இருவர் உள்ளத்திலும் உள்ள உறவு, அன்பு மங்காமல் மடியாமல் இருக்கிறது; மலராமல் மணக்காமல் நிற்கிறது.

இவ்வாறு ஆண் - பெண் பாத்திரங்களை வைத்துச் சுவையான கதைகளை எழுதியிருக்கிறார் 'அகிலன்'. தெள்ளிய அருவி போன்ற நடை, அங்கங்கே சுகமான கவித்துவப் பண்பாடு சுழிக்கும் வருணனைகள், உபமானங்கள்; எல்லாவற்றுக்கும் மேலாக மனத் தத்துவத்தின் உண்மைகளை நன்கு எடுத்துக் காட்டும் கட்டங்கள் — இவை 'அகிலன்' எழுத்தில் உள்ள அழகுகள்.

தமிழ் நாட்டினருக்கு இப்படி ஓர் எழுத்தாளர் கிடைத்திருப்பது பெரிய லாபம். 'அகிலன்' எழுத்தில் முதிர்ந்த உரன் இருக்கிறது; ஆனால் அவர் இளைஞர். இன்னும் பல கதைகளை எழுதும் நிலையில் இருக்கிறார் என்பது மகிழ்ச்சிக்குரிய செய்தி. இன்னும் பல பல கதைகள் அவரிடமிருந்து வர வேண்டுமென்று வாழ்த்துகிறேன்.

மயிலாப்பூர்
1—9—50

கி. வா. ஜகந்நாதன்.

# குறத்தி

குறத்தி என்று பெயரில்தான் எனக்கு அவளை அழைக்கத் தெரியும். தென்னாட்டுக் குறவர் கூட்டத்தைச் சேர்ந்தவள் அல்ல அவள். வடக்கு இமயப் பிரதேசத்தின் சொந்தக்காரி. உசிலாம்படையைச் சேர்ந்தவள் என்றோ லம்பாடியர் வகுப்புக்காரி என்றோ அவளைச் சொல்வார்கள். கால நிலையின் கோளாறால் இப்படி நாடு நகரமெல்லாம் சுற்றி வந்திருக்கிறாள்.

தன்னுடைய மணிப்பிரவாள நடையில் அவள் தான் கொண்டுவந்திருந்த சாமான்களுக்குக் கடைவீதியில் நின்று விலை கூறிக்கொண்டிருந்தாள். இமிடேஷன் வைரங்கள், பலநிறக் கண்ணாடிக் கற்கள், பாட்டரி லைட்டுகள், கத்திகள் பேனாக்கள் இன்னும் என்னென்னவோ பொருள்கள்.

அவளுக்குப் பக்கத்தில் பத்து வயசுச் சிறுவன் ஒருவன் நின்று உதவி செய்துகொண்டிருந்தான்.

“டைமன் ஸார் ... கத்தி ஸார் ... பாட்டரி ஸார்! —ஒரு ரூபாய், தோ ரூபியா, த்ரீ ரூபீஸ்!” என்று விலை கூறினாள்.

அவளைச் சுற்றிச் சிறிய கூட்டம் ஒன்று கூடிவிட்டது. கண்ணாடிக் கற்கள் சூரிய வெளிச்சத்தில் டால் வீசும் அழகைப் பார்த்துக்கொண்டிருந்தனர் சிலர்; பட்டுப் பைகளில் வர்ண நூலால் பின்னப்பட்ட வண்ண வண்ணப் பூக்களின் எழிலை ரசித்த வண்ணம் இருந்தனர் சிலர்;

ஆனால் அதிகம் பேர் இவற்றில் ஒன்றையும் கவனிக்க வில்லை. அவளையே கண் இமைக்காது பார்த்துக்கொண்டு இருந்தார்கள். அவளுடைய வாய் அசைவுகளையும், சுழலும் கண்களையுமே நோக்கிக்கொண்டிருந்தார்கள். அழகி என்றால் இப்படியும் ஓர் அபூர்வ அழகி இந்த உலகத்தில் இருக்கிறாளா!

இருபதுக்குமேல் நாலைந்து வயசு அதிகமாக இருக்கலாம் அவளுக்கு. பதினெட்டு வருஷங்கூட மதிக்க முடியாத கன்னிப்பெண் போல அவள் காணப்பட்டாள். தலையிலே ஒரு கைக்குட்டையை மடித்துக் கட்டியிருந்தாள். கண் களில் குளுமைக்காக ஒரு கண்ணாடி; உடம்பில் மெல்லிய பழுப்பு நிற ஸில்க் சட்டை; இடுப்பில் சுருக்கம் நிறைந்த கறுப்புப் பாவாடை. பாவாடையின் ஓரத்தில் வெள்ளைக் கரை ஓடியிருந்தது.

தோட்டத்துக் கொடி ஒன்று தளிரும் இலையும், பூவும் பிஞ்சுமாய்க் காற்றில் குலுங்கி நின்றால் எப்படி இருக்கும்? அத்தகைய பூங்கொம்பின் சுந்தர வடிவம் ஒன்று அவளு டைய மேல் சட்டையில் பின்னப்பட்டிருந்தது. அந்தப் பூங்கொடியில்தான் எத்தனை நிறங்களில் பூக்கள்! அந்தப் பூக்களை மொய்த்துக்கொண்டுதான் எத்தனை எத்தனை வண்ணாத்திப் பூச்சிகள்!—பிங்கான் தட்டுகளில் மின்னிக் கொண்டிருந்த கண்ணாடிக் கற்களைப் போலவே, அவளு டைய உடம்பில் தவழ்ந்துகொண்டிருந்த அந்தத் துணிப் பூக்களும் வண்ணாத்திப் பூச்சிகளும் மின்னின.

அழகுடன் அழகு சேரும்போது, அந்த அழகை இளமை அணைந்துக் கொள்ளும்போது, அந்த அழகுக்கும் இளமைக்கும் செயற்கை கலை மெருகேற்றும் தாதிப் பெண்ணாக அமையும்போது, அங்கு உருவாகும் கந்தர்வ

லோக சிருஷ்டியை என்னவென்று வர்ணிப்பது! அவளை, அந்தக் குறத்தியை எங்ஙனம் நான் என்னுடைய சாதாரண வார்த்தைகளால் உங்கள் கண்முன்னே கொண்டுவந்து நிறுத்தமுடியும்?—அவள் தெருப் புழுதியிலே நிற்கப் பிறந்தவளல்ல; கவிஞர்களின் மௌனக் கனவுகளிலே மட்டும் உலவ வேண்டியவள். ஆனால் அத்தகைய பெண்பிள்ளை இங்கே நாசியும் நாப்பும் நிறைந்த கடைத் தெருவிலே நின்று தன்னுடைய பொருள்களை ஒரு ரூபாய்க்கும் அரை ரூபாய்க்கும் விலை கூறிக்கொண்டிருந்தாள். கபமைத்தனம் நிறைந்த கண்கள் அவளை அணு அணுவாய்த் தின்பதைக்கூடக் கவனியாமல் அவள் தன் தொழிலில் ஈடுபட்டிருந்தாள்.

அவள் சத்தமிட்டாள்.

"தோ ருபியா ஸார்! ரண்டு ருபீ ஸார்! டு ருபீஸ் ஸார்! ஜோரான கத்தி ஸார்! கூரான கத்தி ஸார்! குத்துனு சத்துப்போவான் ஸார்!"

விளையாட்டாகப் பக்கத்திலே நின்று தன்னை விழுங்கிக் கொண்டிருந்த ஒரு கல்லூரி மாணவனை நோக்கி ஓங்கினாள். அவன் அலறி அடித்துக்கொண்டு பின்னால் பதுங்கினான்.

"பின்னே என்ன ஸார்? சும்மா சும்மா என்னையே பாக்கறே!...என்னையா விலைக்கு வாங்கப்போறே!—நான் வேணுமா ஸார் ஒனக்கு? தௌசெண் ருபீஸ்; ஆயிரம் ருபியா!" என்று சொல்லிக் கலகலவென்று சிரித்தாள். கூட்டமும் கொல்லென்று நகைத்தது. அந்த இளம் மாணவனிடம் ஆயிரமல்ல, லக்ஷ ரூபாய் இருந்தால் கூட அவளை வாங்கி விடுவான். அவனிடமும் பணம் இல்லை; அவளும் தன்னை விற்பதாக இல்லை.

கூட்டத்துக்குள் புதுமனிதர் ஒருவர் வந்துசேர்ந்தார். போலீஸ் உடை; சப்இன்ஸ்பெக்டர் போலயிருந்தது. கூட்டத்தினர் அவரைச் சரியாகக் கவனிக்கவில்லை. வந்தவர் கூட்டத்தின் முன்வரிசைக்குச் சுலபமாக வந்து விட்டார். அப்போது அவள் குனிந்து தன் சாமான்களை வரிசையாக அடுக்கிக்கொண்டிருந்தாள். எதிரே நிற்பவரை அவள் ஏறிட்டுப் பார்க்கவில்லை.

சப்இன்ஸ்பெக்டர் ஒரு பிங்கான் தட்டில் கையை வைத்து அந்தக் கற்களை அழகு பார்க்கத் தொடங்கினார். ஒரு நீலக்கல்லை மட்டும் திருப்பித் திருப்பிப் பார்த்துக் கொண்டிருந்தார். குனிந்துகொண்டிருந்த குறத்தியின் கண்கள் அவருடைய கையை உற்று நோக்கின. அந்தக் கையில் புரியாத பாஷையில் என்னவோ பச்சை குத்தப் பட்டிருந்தது. அந்த எழுத்துக்களை நன்ருய்க்கவனித்தாள். அவளுடைய உதடுகள் துடித்தன.

படீரென்று தலையை மேலே தூக்கி, சப்இன்ஸ்பெக் டரை வெறித்துப்பார்த்தாள். அதைப் பார்வை என்று சொல்வது? 'வீல்' என்று உடனே கத்தினாள். மின் வெட்டுப்போல அருகே இருந்த கூரான கத்தியை எடுத்துக்கொண்டு அவர்மேல் பாய்ந்தாள். 'கோவிந்த்!' என்ற அவள் குரலும் அவளுடைய கத்திக் கையின் வீச்சும் ஒன்ருக இருந்தன.

நல்ல வேளை; கத்தி அவர் நெஞ்சில் பாயும் முன்பு அவளுக்குப் பக்கத்தில் நின்ற சிறுவன் அவள் கையை இறுகப்பற்றிக் கத்தியைப் பிடுங்கிவிட்டான். கத்தி போனதற்காக அவள் காத்திருக்கவில்லை. பளீரென்று ஓங்கி அவர் கன்னத்தில் ஓர் அறை விட்டாள். ஐந்து விரல்களும் பதியும்படியான அறை அது. கூட்டம்

அதற்குள் விவகாரத்தில் தலையிடத் தொடங்கியது. அடுத்த அறையோ அல்லது கத்திக் குத்தோ சப்இன்ஸ் பெக்டருக்குக் கிடைக்கவில்லை.

போலீஸ்காரர்கள் வந்தார்கள். அவளைக் கைது செய்து அழைத்துப் போனார்கள். அவளருகே இருந்த பையன் சாமான்களை மூட்டை கட்டிக்கொண்டு, புரியாதபடி சத்தமிட்டுக்கொண்டே தங்களுடைய கூடாரத்தை நோக்கி ஓடினான். கூட்டத்தினருக்கு ஒன்றுமே புரிய வில்லை. எல்லோருடைய பச்சாத்தாபமும் அவளு டனேயே ஸ்டேஷனுக்குள் நுழைந்தது. ஏன் அப்படி அறைந்தாள்? ஏன் அவரைக் கொல்லப்போனாள்? சப் இன்ஸ்பெக்டர் கோவிந்தனின் பெயர் எப்படி அந்த நாடோடிக்குத் தெரிந்தது?—கூட்டத்தினர் மூளையைக் குழப்பிக்கொண்டனர்.

'கொலை செய்ய யத்தனித்த குற்றத்திற்காக, அதுவும் உத்தியோகத்தின் மேல் இருந்த ஓர் ஊழியரைக் கொலை செய்ய முயன்றதற்காக அவளுக்கு ஐந்தாறு வருஷங்கள் ஜெயில் வாசம் கிடைக்கும்' என்றார் சட்டம் தெரிந்த ஒருவர்.

அவள் ஏன் அவரை அப்படி அறைந்தாள்?—

'லாக் அப்'பில் அவள் இருந்தாள். ஏதும் அறியாதவள் மாதிரித் தன் பாவாடையைத் தரையில் பரப்பிக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவளுடைய கரங்களில் ஊசியும் வண்ண நூலும் இருந்தன. அவள்பாட்டில் பையோ கைக்குட்டையோ பின்னிக்கொண்டிருந்தாள்.

வேறு யாரும் அங்கு இல்லை. சப்இன்ஸ்பெக்டர் கோவிந்தன் மட்டும் இரும்புக் கதவுக்கு வெளியே நின்று அவளைப் பார்த்துக்கொண்டிருந்தார். அவர் வந்து பத்து நிமிஷங்கள் ஆகிவிட்டன. அது அவளுக்கு நன்றாய்த் தெரியும். அவள் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. கொஞ் சமும் அவரை லட்சியம் செய்யவில்லை.

"ரோஷனா!"

அவளுடைய மௌனம் அப்படியே இருந்தது.

"ரோஷனா" என்று சற்றுப் பலமாக அவளை அழைத்தார் அவள் மெதுவாகத் திரும்பித் தன் இமைகளை உயர்த்தி விட்டு மீண்டும் திரும்பிக்கொண்டாள்.

"ரோஷனா, உனக்கு நடந்தது ஒன்றும் தெரியாது. தெரிந்திருந்தால் என்னை நீ புரிந்து கொள்வாய்" என்றார்.

அதற்குள் ஒரு சிறுவன் அவரிடம் ஓடிவந்தான். "அப்பா, அம்மா டிபன் கொடுத்துவிட்டிருக்குதப்பா! சீக்கிரம் உங்களை வரச் சொல்லிச்சு. சினிமாவுக்குப் போகவேண்டுமாம்!" என்றான்.

ரோஷனா அந்தப் பையனை நன்றாகப் பார்த்தாள், அவனுடைய வார்த்தைகளையும் கேட்டாள். மறுபடியும் தன் வேலையில் ஈடுபட்டாள்.

"ரோஷனா!" என்றார் கோவிந்தன். அத்துடன் தமக் காக வந்திருந்த பலகாரத்தையும் கம்பிகளின் வழியாக உள்ளே வைத்தார்.

பலகாரத்தை வெறுப்போடு இழுத்து அவர் பக்கம் நகர்த்தினாள். படீரென்று தன் கையிலிருந்த இரும்பு ஊசியை இரண்டாக முறித்தாள். "இதோ பார்; இந்த ஊசியை உன்னால் மறுபடியும் ஒட்டவைக்க முடியுமா?

நீ போ! என்னைப் பார்க்காதே! கேஸ் போட்டு என் கழுத்தை வெட்டு! இங்கே நிற்காதே; போ!" என்று தனக்குத் தெரிந்த கொச்சை மொழியில் கத்தினாள்.

கோவிந்தன் நாற்காலியில் உட்கார்ந்து மேஜையில் தலையைக் கவிழ்த்துக் கொண்டார். "இன்றைக்குச் சினிமாவுக்கு என்றால் வரமுடியாது; வேலை நிறைய இருக்கிறது. போய்ச் சொல்" என்று பையனை அனுப்பினார். அவருடைய பையனுக்கோ மனைவிக்கோ ஒரு மணி நேரத்திற்கு முன்பு அவருக்கு நேர இருந்த ஆபத்தான சம்பவம் தெரியாது.

ஆறு ஏழு வருஷங்களுக்கு முன்பு நடந்தது:

கோவிந்தன் கல்லூரி மாணவராக இருந்தார். திடகாத்திரமான தேகம். ஓட்டம் ஆட்டம் உடற்பயிற்சி முதலியவற்றில் பள்ளிக்கூடத்தில் இவருக்குத்தான் முதல் பரிசு. அதே காரணத்தால்தான் இவர் இந்த வேலையில் சேரவும் நேர்ந்தது.

மாணவர்கள் கோஷ்டி ஒன்று இமயமலைச் சாரலுக்கு உல்லாசமாகத் தெற்கேயிருந்து புறப்பட்டது. ஐந்தாறு பேர்கள் ஒரு மாத காலம் வடக்கே சுற்றி வருவதற்காகக் கிளம்பினார்கள். பல ஊர்களுக்குப் போய்விட்டு வடமேற்கு எல்லைப்பக்கம் கிளம்பினார்கள். மலைச்சாரலில் இருந்த சிறு நகரம் ஒன்றிலிருந்து டாக்ஸியை அமர்த்திக் கொண்டு மலைப்பிரதேசத்திற்குள் நுழைந்தார்கள். பத்துப் பதினைந்து மைல்கள் கடந்துவிட்டன. அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சிறுசிறு குடிசைகள் வழியில் எப்போதாவது தென்பட்டன. மனித சஞ்சாரமே முற்றும் குறைந்து விட்டது. கடைசியாக ஓர் எல்லை வந்தது. அதற்கு அப்பால் செல்லமுடியாது என டிரைவர் மறுத்து

விட்டார். அந்த எல்லையிலும், ''தடுக்கப்பட்ட பிரதேசம். பிரயாணிகள் இதற்கு வடக்கே செல்லக்கூடாது. அபாயத்திற்கு உள்ளாவார்கள்'' என்று போர்டு ஒன்று நிறுத்தப்பட்டிருந்தது.

கட்டுக்கு அடங்காத காளைப்பருவம், பயமுறுத்தலுக்கு, எங்கே லேசில் பணியப்போகிறது? இன்னும் கொஞ்ச தூரம் போகத்தான் வேண்டும் என்றனர் எல்லோரும். டிரைவருக்கு அதிகப் பணம் தருவதாக ஆசை காட்டினர். ''பனிமலை பெயர்ந்து வந்து உங்கள் மேல் விழப்போனால் நாங்கள் அத்தனை பேரும் அதைத் தாங்கிக்கொண்டு உங்களைக் காப்பாற்றுகிறோம், டிரைவர். நீங்கள் கவலைப் படவேண்டாம்; ஓட்டுங்கள்!'' என்று உற்சாகப்படுத்தினார் கோவிந்தன். பசிக்கும் வயிற்றின் பணத்தாசை, பயத்தை மிஞ்சியது. டிரைவர் மேலே ஓட்டினார்.

அபாயப் பிரதேசத்திற்குள் ஐந்து மைல் சென்றபிறகு எல்லோரும் காரை விட்டுக் கீழே இறங்கினார்கள். இல்லாத அபாயத்தைப் பற்றிச் சொல்லிச் சொல்லிச் சிரித்தார்கள். அபாயத்தைத் தேடி அங்கும் இங்கும் மலை இடுக்குகளில் அலைந்தார்கள். பஞ்சைப் போன்ற மேகக் கூட்டமும் பாறுங்கல்லான மலையும் ஒன்றை ஒன்று தழுவி மோனநிலையில் இருப்பதைக்கண்டு வியந்தார்கள்.

ஆளுக்கு ஒரு மூலையில் பிரிந்தனர். கைக்'காமிரா'க்கள் கண் சிமிட்டிப் படம் பிடித்தன.

'அழகுத்தேவி நித்திரை செய்யும் இடத்தை அபாயம் என்று ஒதுக்கி இருக்கிறானே மனிதன்' என்று ஆச்சரியப் பட்டுக்கொண்டார் கோவிந்தன்.

ஆனால் அழகின் மடியிலிருந்து அபாயம் வரத்தான் செய்தது: ''டும் டுமீல்....டும்!''

குண்டுச்சத்தம் மலைகளில் எதிரொலித்துக் கிடுகிடுத்தது. மாணவர்கள் மூச்சைப் பிடித்துக்கொண்டு காரை நோக்கி ஓட்டமெடுத்தனர். ஏறியவர்களையும் ஏறாதவர்களையும் பற்றிக் கவலைப்படவில்லை டிரைவர். சிட்டாய்ப் பறந்தது கார்.

"டிரைவர்! டிரைவர்! கோவிந்தனைக் காணோம்; நிறுத்துங்கள்!" என்று கூச்சலிட்டனர் மாணவர்கள்.

"முடியாது! ஒருவருக்காக எல்லோரும் உயிரை விடப் போகிறீர்களா? நிறுத்தமாட்டேன்! உங்களுடைய கூலிக்காக என் உயிரைப் பணயம் வைக்க முடியாது!" என்று பதிலுக்குக் கத்திக்கொண்டே காரை விரட்டினார்.

கோவிந்தன் முழு மூச்சோடு காருக்குப் பின்னால் ஓடிவந்து கொண்டிருந்தார். அவரைத் தொடர்ந்து எமன் உருவத்தில் ஒரு பட்டாணி முரடன் துரத்திக் கொண்டு வந்தான். காற்றில் துப்பாக்கிக் குண்டுகள் சீறிக்கொண்டு பறந்தன. ஆ! கோவிந்தனின் இடது காலுக்கு ஒரு குண்டு. அவர் தடாலென்று தரையில் குப்புற விழுந்தார். ரத்தம் காலிலிருந்து குபுகுபுவென்று பாய்ந்தது.

## 3

கோவிந்தனுக்கு மயக்கம் தெளிந்தபோது அவர் ஒரு புது உலகத்தில் இருந்தார். புரிந்து கொள்ளமுடியாத கலவரம் நிறைந்த உலகமாகக் காணப்பட்டது அது. அவருக்கு நாலுபக்கங்களிலும் உயர்ந்த மலைகளின் செங்குத்தான சரிவுகள். அவைகளுக்கு மத்தியில் காணப்பட்ட சிறிய சமவெளியில் ஒரு கூடாரத்தில் அவர் படுத்துக் கிடந்தார். பத்துப் பன்னிரண்டு முரடர்கள்

அவரைச் சுற்றிலும் வளைத்துக் கொண்டு நின்றனர். காலுக்குப் பக்கத்தில் பெரிய கணப்புச் சட்டியில் நெருப்பு எரிந்தது. தலைக்கு நேரே துப்பாக்கியை நீட்டிக் கொண்டு ஒருவன் தயாராக அவரைச் சுட விரும்புவது போல் நின்றான்.

அவரது சட்டைப் பைகள், கால் சராய்கள் எல்லாம் பரிசோதனைக்கு உள்ளாயின. கைக் காமிரா, டைரி, சிறிய கதைப் புத்தகம், கொஞ்சம் சில்லரையுடன் 'மணி பர்ஸ்'— இவற்றைத் தவிர அவரிடம் வேறு ஒன்றும் இல்லை.

காலில் ஒரு கட்டுப் போட்டிருந்தது. வலி அதிகமாகத் தெரியவில்லை. குளிரின் பிடுங்கல் பொறுக்க முடியாமல் துன்புறுத்தியது. ரத்த ஓட்டமே உறைந்து போய் விடுமோ என்பதுபோல் அவ்வளவு அதிகமான குளிர். மெதுவாக உடம்பை அசைத்துக் கணப்பு நெருப்பின் பக்கத்தில் புரண்டு படுத்தார்.

சுற்றியிருந்தவர்களில் வயசான ஒரு கிழவர் கோவிந்தனைப் பார்த்து என்னவோ கேள்வி கேட்டார். என்ன கேட்டார் என்பது கோவிந்தனுக்கு விளங்கவில்லை. அவர் மேலும் மேலும் அதே கேள்வியைத் திருப்பிக் கேட்டார், கோபத்துடன் கேட்டார். கோவிந்தனுக்குச் சிரிப்புத்தான் வந்தது. பயத்தின் குறுகுறுப்பு அடங்கிப் போய், கோவிந்தனுக்கு இப்போது சாவு தனக்கு வெகு அருகில் இருப்பதாக ஒரு பிரமை ஏற்பட்டிருந்தது. அதனால் அவர் எதைப்பற்றியும் கவலைப்படவில்லை. கலகல வென்று அந்த மனிதரின் வார்த்தைகளைக் கேட்டுச் சிரித்தார்.

கிழவரின் கண்களில் தீப்பொறி பறந்தது. தலைக்கு மேலே துப்பாக்கியுடன் நின்ற மனிதன் அவருடைய நெஞ்சில் அதைக் கொண்டு வந்து அழுத்தி, அவனுடைய பங்குக்கு எதையோ உளறிக் கொட்டினான்.

"சுடுங்கள்! சீக்கிரம் சுட்டுத் தொலையுங்கள்! ஏன் இப்படிப் போட்டு உயிருடன் வதைக்கிறீர்கள்?" என்று கோபமாகக் கத்தியபடியே கோவிந்தன் தன் மார்பைத் திறந்து காட்டினார். காக்கிச் சட்டை இரண்டாகக் கிழிந்து அவருடைய இளம் நெஞ்சைக் காட்டிக் கொடுத்தது.

சுற்றி நின்றவர்கள் அசையாத சித்திரமானார்கள். எல்லாக் கண்களும் கோவிந்தனையே பார்த்தன. ஒருவரது வாயும் அசையவில்லை. திடீரென்று அங்கே மௌனம் நிலவியது. அந்த மௌனத்தின் ஊடே திரையை விலக்கிக் கொண்டு கூடாரத்திற்குள்ளிருந்து ஒரு கட்டழகி வெளிப்பட்டாள். கோவிந்தனின் முகத்தையும் அவரது பறந்த மார்பையும் மாறி மாறிப் பார்த்தாள்.

"ஏன்? சுடுங்களேன்! புரியவில்லையா? Fire! Shoot!" என்று தமிழிலும் ஆங்கிலத்திலுமாகச் சேர்ந்து கத்தினார்.

பட்டாணிக் கிழவர் பக்கத்தில் வந்து உட்கார்ந்தார். மெதுவாகக் கோவிந்தனைப் பார்த்துச் சிரித்தார். அவருடைய தோளைப் பிடித்துத் தட்டிக் கொடுத்தார். ஏதோ அன்புடன் ஒரு வார்த்தை கூறினார். அதையே அங்கு இருந்த எல்லோரும் சிரித்துக்கொண்டு எதிரொலித்தனர். அந்தப் பெண் பிள்ளையும் அவரைப் பார்த்த கண் வாங்காமல் அந்தச் சொல்லையே இரண்டு மூன்று முறை திருப்பிச் சொன்னாள்.

விருந்தாளி!....

கோவிந்தனுக்குப் பெயரே இப்போது விருந்தாளிதான். அந்த வார்த்தைக்குள் அந்த மலை நாட்டார் பொதிந்து வைத்திருந்த அன்பின் அருமைதான் எத்தகையது! மலையைப்போன்ற மனசு படைத்த அவர்களை பஞ்சு போன்ற லேசான தன்மைக்குக் கொண்டு வந்த அந்த மந்திரச் சொல்லின் வேகத்தைக் கோவிந்தன் அங்கேதான் தன் அனுபவத்தில் முதல் முறையாகக் கண்டார். எம லோகத்தில் இறங்கிவிட்ட அந்த இளைஞரை அந்த ஒரு சொல் இந்திர லோகத்திற்கு ஏற்றிவிட்டது. இந்திர லோகம் என்பதையும் அதில் கந்தர்வ வாழ்க்கை என்பதையும் கோவிந்தன் அங்கேதான் அனுபவித்தார்.

அந்தக் கிழவர், அவருடைய மனைவி, குமாரர்கள், மருமக்கள் எல்லோரும் கோவிந்தன் மேல் உயிராக இருந்தார்கள். பெரியவரின் குடும்பத்திற்கே கோவிந்தன் விருந்தினராகிவிட்டபோது மற்றவர்களைப் பற்றிக் கேட்கவா வேண்டும்? எங்கே சென்றாலும் புன்னகை, எங்கே சென்றாலும் தேநீர், எங்குமே ஆடலும் பாடலும் நிறைந்த வரவேற்பு.

கோவிந்தன் அந்த மலைப்பிரதேசத்தின் மேடு பள்ளங்களில் சர்வ சுதந்திரத்துடன் சுற்றித் திரிந்தார். மாணவப் பருவத்து மனம் அவருடன் அந்த வெளியெல்லாம் சிறகடித்துப் பறந்தது. ஆனால் அவருடைய சுதந்திரத்துக்குக் காவலாகவே அவருடன் எப்போதும் ஒரு தங்க விலங்கும் கிளுகிளுத்துக்கொண்டு வந்தது. அந்த விலங்கு தானாக வந்து அவரைச் சுற்றிக்கொண்டது. எங்கே போனாலும் அவருடனே வளைத்துக்கொண்டுபுறப்பட்டது. அந்த இன்ப விலங்குதான் ரோஷனா! பெரியவரின்

கடைசிப் புதல்வி. மலைப்பிராந்தியத்துப் பெண்ணினமே பொறாமை கொள்ளத்தக்க பேரழகி; கன்னிப் பெண். முதல் முறை கூடாரத்துத் திரையை விலக்கிக் கொண்டு சாகத் தயாராக இருந்த கோவிந்தனின் உள்ளத்தில் தானாகப் புகுந்து கொண்டாளே, அவள்.

கோவிந்தனுக்கு வெளி உலகத்து நினைவே ஏற்படாத வண்ணம் செய்து விட்டாள் அவள். தமிழ் நாட்டின் கதிரொளிக் கதகதப்பை மறக்கும்படியான நிலைமைக்குக் கோவிந்தன் வந்து கொண்டிருந்தார். விடாப்பிடியாகச் சுற்றிப் படரும் மாதவிக் கொடியாக அவள் அவரைச் சுற்றிக் கொண்டாள். அவருடைய பள்ளி நண்பர்களும், உடன் பிறந்தவர்களும், ஏக்கத்தால் வாடும் தாயாரும் எப்போதாவதுதான் அவருடைய அமைதியைக் கிளறுவார்கள்.

4

இரு முகங்களும் ஒன்றை ஒன்று பார்த்துக்கொண்டே இருந்தன. கண்கள் இமைப்பை மறந்தும் இருதயம் துடிப்பை மறந்தும், சுற்றுப்புற வெளி சலனத்தை மறந்தும் அந்தக்காட்சிக்கு நிலைக்களனாக விளங்கின. காற்றுக்கூட அசையவில்லை. உட்கார்ந்திருந்த ரோஷனு வின் அருகில் கோவிந்தன் படுத்துக்கிடந்தார். எத்தனை நேரம் இப்படி மெய் மறந்து இருந்தார்களோ தெரியாது. இன்பத்தின் எல்லையை எட்டிவிட்டபோதுதான் துன்ப நினைவு வருகிறது. கோவிந்தனின் தாய் தங்கம்மாள் தன்னுடைய செல்லப்பிள்ளையை நினைத்து எந்த மாதிரி துடிக்கிறாளோ? உயிருடன் இருப்பது தெரிந்தாலாவது

அப்புறம் சுற்றிச் சுற்றி வந்து 'அண்ணு அண்ணு என்று காலைக் கட்டிக்கொண்டு திரியும் அவருடைய கடைசித் தங்கை சாந்தியின் பச்சை முகம்; அதன் பரபரப்பு. பள்ளிக்கூடம் ... விளையாட்டு மைதானம்....சினிமாக் கொட்டகைகள் ... பத்திரிகைகள் நாவல்கள்.

கோவிந்தன் அப்படியும் இப்படியுமாக அவர்களுடைய மொழியைப் பேசக் கற்றுக் கொண்டார். அதற்காக ரோஷுவும் அவரும் பட்டபாடு தனிமையில் ஒதுக்குப் புறமாக இருக்கும் சிறு மலைப் பிளவுகளுக்குத் தான் தெரியும்.

"ரோஷு!"

அவள் உற்றுக் கேட்டாள்.

"நீ என்னுடன் வந்து விடுகிறாயா? நாம் தெற்கே போய்ச் சந்தோஷமாக இருப்போம். அங்கே எனக்கு எல்லா வசதிகளும் இருக்கின்றன."

அவள் சற்று நிதானித்தாள்; கவலைக்குறி லேசாக அவள் புருவத்தில் நெளிந்தது.

"பனியில் மலரும் பூவைப்பறித்துப் பாலைவனத்திற்குக் கொண்டு போக விரும்புகிறீர்களா? அங்கே அது வாடிக் கருகி விடுமே!" என்றாள்.

"அப்படியானால் நான்? — இந்தக் குளிரில் தானே இருக்கிறேன்? எனக்குப் பழக்கப்படாத குளிரல்லவா இது?"

"பொய்! பொய் சொல்லுகிறீர்கள்! உங்களுக்கு குளிரே இங்கு இல்லை. நான்தான் உங்களை எப்போதும்

குளிரிலிருந்து பாதுகாத்து வருகிறேனே! இன்னும் கொஞ்ச நாள் பொறுங்கள். அப்புறம் உங்கள் நாட்டு இன்ப வெப்பத்தை இங்கு முற்றும் காணுவீர்கள்'' என்று சொல்லி அவர் கரத்தை இறுகப் பற்றிக்கெண்டாள்

முதல் முறையாக நாணத்தால் குப்பென்று ரோஜா நிறத்தில் மாறிய அவள் வதனத்தைக் கோவிந்தன் இப்போதுதான் கண்டார்.

''சரி; எங்கே, கையைச் சரியாக நீட்டுங்கள்; பச்சை குத்திவிடுகிறேன்.'' — இப்படிச் சொல்லிவிட்டு அவருடைய கரத்தில் 'ரோஷு—கோவிந்தன்' என்று தன்னுடைய சொந்த மொழியில் குத்தி விட்டாள்.

அன்பின் உருவங்களாக நடமாடிய அந்தப் பக்கத்து ஜனங்களில் கோவிந்தனின் கண்களுக்கு ஒரே ஓர் இளைஞன் மட்டும் அப்படித் தோன்றவில்லை. அவனுடைய பார்வை எப்போதும் ஒரு மாதிரியாகவே கோவிந்தன் மேல் விழுந்து கொண்டிருந்தது. 'விருந்தாளி' என அவன் கோவிந்தனை அழைக்கும்போது அந்த வார்த்தைக்குரிய அன்பு அவன் குரலில் ஒலிப்பதில்லை. மறைமுகமான வெறுப்பையும் பொருமையையுமே கோவிந்தன் அவனிடம் உணர்ந்தார்.

தனியாக ஒரு நாள் மாலை கோவிந்தன் உலாவிக் கொண்டிருந்தார். நினைவுகள் முழுவதும் சொந்த ஊர்ப் பக்கம் புறப்பட்டு விட்டன. திடீரென்று எதிரேயிருந்து ஒரு குரல் வந்தது.

''விருந்தாளி! உன் பெயரைக் காப்பாற்றிக் கொள். நீ இங்கு வந்து அதிக நாள் ஆகிவிட்டன. இனியும்

எதிரே அந்த வெறுப்பு நிறைந்த இளைஞன் ரிவால்வாருடன் நின்று கொண்டிருந்தான்.

"ஏன்?" என்றார் கோவிந்தன்.

"விருந்தாளி என்பவன் எப்போதும் இங்கேயே இருப்பவனல்ல; வந்தவுடன் திரும்புகிறவனுக்குத்தான் அந்தப் பெயர்; அவனுக்குத்தான் அதற்குரிய மரியாதைகள் கிடைக்கும்."

"திரும்பாவிட்டால்?"

"இதோ இந்தத் துப்பாக்கியின் குண்டுகள்" என்று ரிவால்வாரை நீட்டினான்.

"நான் விருந்தாளி அல்ல; உன் இஷ்டப்படி செய்து கொள். தாராளமாய்ச் சுட்டுத் தள்ளேன். விருந்தினன் என்றால்தானே நீ தயங்க வேண்டும்?" என்றார் சிரித்துக் கொண்டு.

"இல்லை நீ போ! — நீ இங்கிருந்து கிளம்பாவிட்டால் உன் கண்ணெதிரே ரோஷனா செத்துக் கிடப்பதைக் காண்பாய்! ஒன்று ரோஷனா எனக்குச் சேரவேண்டும், இல்லாவிட்டால் இந்தத் துப்பாக்கிக்குச் சொந்தமாக வேண்டும்!" என்றான் இளைஞன்.

கோவிந்தனின் மனம் ஒரு முறை குலுங்கி விழுந்தது. இளைஞன் தொடர்ந்து பேசினான்:

"நீ நேற்று வந்தவன். மூன்று வருஷங்களாக நான் அவளைத் தொடர்ந்து அலைகிறவன். நான் அவளிடம் கொண்டிருக்கும் உரிமையைப்பற்றி நீ ஏதாவது உணர முடியுமா?"

முகத்தைச் சுளித்து யோசனை செய்த வண்ணம் சற்று அங்கே நின்ருர் கோவிந்தன். பிறகு இருவரும் ஒன்றும் பேசிக்கொள்ளாமல் அவரவர்கள் வந்த வழியே திரும்பினர்.

## 5

இளவேனிற் காலத்து முழு நிலா; அன்றைக்கு நிலாப் பண்டிகை கொண்டாடுவதற்கான ஏற்பாடுகள் பிரமாதமாக நடந்து கொண்டிருந்தன. பல நிறத் துணிகளில் கோவிந்தனுக்குக் கவர்ச்சிகரமான உடைகள் தைத்து வைத்திருந்தாள் ரோஷனு. இரண்டு மூன்று நாட்களுக்கு முன்பிருந்தே கோவிந்தனுக்கு ரோஷனுவின் முன்னிலையில் நடன ஒத்திகை நடந்து கொண்டிருந்தது.

விழா ஆரம்பமாயிற்று, நாகரிகம் நிறைந்தவர்கள் என்று சொல்லிக்கொள்பவர்களாலும் பட்டணத்து மாடிகளிலும் சிறு அறைகளிலும் வசிப்பவர்களாலும் அந்த விழாவைப் பற்றித் தெரிந்து கொள்ளவே முடியாது. காட்டுக் கொடியின் துடிதுடிப்பையும், அதன் தளிர்கள் தென்றலுடன் கொஞ்சும் அழகையும் பருக முடிந்தவர்கள் தாம் மலைச் சாதியாரின் நிலா நடனத்தைக் கண்டு மனம் பொங்க முடியும்.

பல விதமான வாத்தியங்களுடன் ஆண் பிள்ளைகள் அங்குள்ள சிறிய மைதானத்தின் மத்தியில் கூடினர்கள். தம்பட்டை, தாரை, மேளம் முதலிய இசைக் கருவிகள் எத்தனை அவர்களிடம் உண்டோ அத்தனையும் சபைக்கு வந்து விட்டன. கோவிந்தனுக்குக் குழல் வாசிக்கத் தெரியும். அவர் குழல் சகிதமாக ரோஷனு செய்து வைத்த உடை அலங்காரங்களுடன் கூட்டத்திற்கு வந்திருந்தார்.

பெண்களின் நடனம் தொடங்கியது. ஒவ்வொருவ ராகவும், இரண்டு மூன்று பேர் சேர்ந்தும் ஆடினார்கள். கூட்டங் கூட்டமாக நடக்கும் பெரு நடனமும் நடந்தது. அப்புறம் ஆண்களும் பெண்களும் தனித் தனியாகவும் கூட்டங் கூட்டமாகவும் ஆடினார்கள்.

கோவிந்தனும் ரோஷனுவும் நடனமாடும்போது கோவிந்தன் ரோஷனுவின் கைப் பாவையாகவே மாறி விட்டார். அவர் உணர்வு முழுதும் மயங்கி விட்டது. வாழ்வில் இப்படியும் ஒரு சந்தர்ப்பம் தம்மைப்போல ஒரு நவயுவனுக்குக் கிடைக்கக் கூடுமா என்னும் வியப்பும் அதற்குக் காரணமான இன்ப நிறைவும் அவரை நினைவு இழக்கச் செய்து விட்டன. — ரோஷனு சொல்லிக் கொடுத்த நடனப் பாடமெல்லாம் அவருக்கு அறவே மறந்துவிட்டது. மனம் போனபடி ஆடினார். சமயங் களில் ரோஷனுவே தம்மையும் ஏற்றுக்கொண்டு ஆடும் நிலைமைக்கு அவளைக் கொண்டுவந்துவிட்டார்.—

ரோஷனு!

அவள் இப்போது கந்தர்வ குமாரி; அளவுக்கு மீறித் தேனைப் பருகிய இளம் பூஞ்சிட்டு; இன்ப லாகிரிகொண்ட வண்ண மணிப் புறு.— அவள் ஆடவில்லை; ஆட்டு விக்கப்பட்டாள். அவளுடைய கால்களுக்கு வெறி பிடித்து விட்டது; இன்ப வெறி; இளமை வெறி; நிலவின் போதையால் ஏற்பட்ட அழகு வெறி; கோவிந்தனின் ஸ்பரிசத்தால் ஏற்பட்ட அன்பு வெறி.

உச்சி வானத்தைவிட்டு நிலா மேற்கே இறங்கிய பிறகு இருவரும் ஆடி அயர்ந்துவிட்டனர். குளிர்ந்த பாறையில்

சாய்ந்தபடி உட்கார்ந்து கொஞ்ச நாழிகை இளைப்பாறினர். ''சரி, தூக்கம் வருகிறது. நீங்களும் களைத்துவிட்டீர்கள், போய்த் தூங்குங்கள். நாட்கள் இன்னும் அதிகம் இல்லை. இந்த இளவேனில் நம்மை ஒன்று சேர்க்காமலா தப்பித்துக் கொள்ளப் போகிறது?'' என்று சொல்லி எழுந்தாள்.

அவருக்கு உறக்கம் வரவில்லை. மிதமிஞ்சிய துக்கமானாலும் சரி, ஆனந்தமானாலும் சரி, மனிதனை உறங்க விடாதல்லவா? இந்த இரண்டில் எந்தக்காரணமோ தெரியவில்லை. முழுக்கவும் ஆனந்தம் என்று சொல்லமுடியாது. கடைசியாக ரோஷனு கூறிய சொற்களைக் கேட்டபோது கோவிந்தனுக்கு அன்றொரு நாள் நீட்டிய துப்பாக்கியுடன் தோன்றிய இளைஞனின் ஞாபகம் வந்தது. தூக்கம் வரவில்லை,

ரோஷனு உறங்கும் அறைப்பக்கம் திரும்பிப் பார்த்த வண்ணம் கோவிந்தன் படுத்திருந்தார். அந்த அறைக் கதவில் நிதானமாக விழுந்த நிழலுருவம் அவர் இருதய ஓட்டத்தை உடனே நிறுத்தியது. நீட்டிய துப்பாக்கியுடன் ஒரு கை நீண்டிருந்தது. கோவிந்தன் சந்தடி செய்யாமல் எழுந்தார். குபீரென்று பாய்ந்து துப்பாக்கியை ஒரு கையால் பிடுங்கி, மறு கரத்தால் அவன் கழுத்தை அணைத்து வாயைப் பொத்தினர். பரபரவென்று அவனை இழுத்துக்கொண்டு எங்கோ போனர். போய்க் கீழே தள்ளிவிட்டு அருகில் தாமும் உட்கார்ந்தார்.

''விருந்தாளி, நீ எனக்கு ஓர் உதவி செய்வாயா?'' என்றான் அந்த இளைஞன்.

''என்ன?''

''இந்தா, என்னைக் கொன்றுவிடு!''

துப்பாக்கியை இறுகப்பற்றிக் கொண்டு அவனை உற்றுப் பார்த்தார். அந்த இளைஞன் முகத்தில் சவத்தின் களை தான் இருந்தது.

"அடுத்த முறை என் கண்களால் நீயும் அவளும் நடனமாடுவதைப் பார்க்கக்கூடாது! நீ விருந்தினன். ஆகையால் அவனைக் கொல்ல வந்தேன். முடியவில்லை நீ என்னைக் கொன்றுவிடு."

கோவிந்தன் மௌனியானார்.

"என்ன நிற்கிறாய்? உங்கள் நடனத்தைப் பார்த்துக் கொண்டு நிற்கும் கோழையாக இன்னும் என்னால் இருக்க முடியாது."

"தோழா, வா! நாங்கள் இனி நடனமாடவில்லை! நாங்கள் இனிமேல் பேசக் கூட மாட்டோம்; ஒருவரை ஒருவர் பார்ப்பதையும் நிறுத்திவிட்டேன்.—வா, உங்கள் விருந்தினனாகிய என்னைச் சந்தோஷமாக எங்கள் ஊருக்கு வழியனுப்பிவிடு.— என்ன, செய்வாயா? என்று அவன் தோளைப் பற்றினார்.

அவனது உடலின் நரம்புகளில் பரவிய பேரானந்தத்தின் மின்சாரப் பாய்ச்சலைப்பார்க்க வேண்டுமே!

"இப்போதே புறப்படுகிறாயா?"

"இப்போதே" என்றார் கோவிந்தன்.

அவரை அழைத்துக்கொண்டு மலைச் சரிவுகளையும் சிறு குகைகளையும் தாண்டி வந்தான். வழியில் பாறை ஒன்றை நகர்த்தி அதன் அடியில் இருந்து சிறு முடிச்சை எடுத்துக் கொண்டான். நேரான ரோட்டுப் பாதைக்கு வந்து இரண்டு மைல்களுக்கு மேல் அவருக்குத் துணையாக நடந்தான். கடைசியாக அன்போடு அவரை அணைத்துக்

கொண்டு, "சகோதரா உன் உதவியை நான் மறக்கவே மாட்டேன்.—இந்தா, உன் வழிச் செலவுக்கு இதில் பணம் இருக்கிறது. இந்தத் துப்பாக்கியை என் நினைவாக வைத்துக்கொள். இதில் என் பெயர் வெட்டியிருக்கிறேன். உன்னுடைய நினைவாகவே, நீ எனக்கு அளித்த அருஞ்செல்வமாகவே நான் ரோஷணவை வைத்துக் கொள்வேன்." அவன் கண்களில் இரு நீர்மணிகள் மின்னின.

6

சப் இன்ஸ்பெக்டர் கோவிந்தன் 'லாக் அப்' புக்கு வெளியே நின்றுகொண்டிருந்தார். பல வருஷங்களுக்கு முன்பு அந்த மனிதன் தனக்குக் கொடுத்த துப்பாக்கியை பாக்கட்டிலிருந்து எடுத்து உள்ளே கைதியாகி இருந்த அங்காடிக் குறத்தி ரோஷணவிடம் நீட்டினார்.

"இதை நன்ருகப் பார்! நான் உனக்குத் துரோகம் செய்துவிட்டு இங்கு ஓடிவந்து விடவில்லை. இந்தத் துப்பாக்கிக் குண்டிலிருந்து உன் உயிரைக் காப்பாற்றவே, என் நெஞ்சில் உதிரம் சொட்ட சொட்ட உன்னிடமிருந்து பிய்த்துக்கொண்டு வந்தேன்.— இதை நீ நம்பினால் போதும்; எனக்கு நிம்மதி கிடைக்கும்," என்ருர்.

அவள் எந்த விதத்திலும் சமாதானம் அடைந்தவளாகத் தெரியவில்லை.

"சாவைக் கண்டு அஞ்சுபவர் வாழ முடியாது. உன்னைப் போலச் சாவுக்கு அஞ்சியவனுடன் வாழாததுபற்றி எனக்குக் கவலை இல்லை.—போ! என் முகத்தில் இனி விழிக்காதே!" என்று ஆத்திரத்துடன் கத்தினள்.

வாசலில் அவளைச் சேர்ந்தவர்களின் கூட்டம் திரண்டு வந்திருப்பதாகப் போலீஸ் ஜவான்கள் வந்து அறிவித்தனர். சப் இன்ஸ்பெக்டர் கோவிந்தன் வெளியே வரவில்லை. ஜன்னல் பக்கமாக நின்று தெருவைக் கவனித்தார். அங்கே அவர் கண்ட காட்சி: அவரை உயிருக்கு உயிராக நேசித்த அனைவரும் அதில் இருந்தார்கள். அந்த இளைஞன் இருந்தான்; ரோஷணுவின் தந்தை அந்தக் கிழவர் இருந்தார். —காலத்தின் கோலம், பசியின் வேதனை நாகரிகத்தின் தற்காலப்போக்கு அவர்களை நாடோடிகளாக்கித் தெருவில் விட்டுவிட்டது.

"விட்டு விடுங்கள்! அவளைப் பத்திரமாக விடுதலை செய்து அவர்களிடம் ஒப்படையுங்கள்" என்று சொல்லி விட்டுக் கோவிந்தன் மேஜைக்கு வந்து குப்புற விழுந்தார்.

அன்று மாலை அந்தி மயங்கும் வேளையில் சாதாரண உடையுடன் கோவிந்தன் நாடோடிகளின் கூடாரங்கள் இருந்த பொட்டல் வெளிக்குப் புறப்பட்டார். கூடாரங்கள் போட்டிருந்த சுவடுகூட அங்கே தெரியவில்லை. தூரத்தில், வெகு தூரத்தில் நேரான ரோட்டுப் பாதையில் மூட்டை முடிச்சுகளுடனும் குஞ்சு குழந்தைகளுடனும் கழுதைப் பரிவாரங்களுடனும் சிறு கூட்டம் ஒன்று போவது புழுதிப் படலத்திற்கு அப்பால் தெரிந்தது.

வெறி பிடித்தவர்போல் கோவிந்தன் அந்தக் காட்சியையே பார்த்துக்கொண்டிருந்துவிட்டு, கண்ணின் கருமணிகள் அதைப் பார்க்கும் சக்தியை இழந்தவுடன் தம் வலது கரத்தைத் திருப்பிப் பச்சை குத்தியிருந்த அந்த ரோஷணு என்னும் எழுத்துக்களை முத்தமிட்டார். ★

# இரவு - பகல்

**வழக்க**மாக விளக்கு வைக்கு முன்பே வீடு திரும்பும் ராமலிங்கம் அன்று இரவு ஒன்பது மணிக்கு மேலாகியும் வீட்டிற்கு வரக்காணேம். கண்ணம்மா ஊருக்குச் சென்றதிலிருந்து அவன் தன்னுடைய பழக்க வழக்கங்களில் சிற்சில மாறுதல்கள் செய்துகொண்டிருந்தான். அத்தகைய மாறுதல்களில் ஒன்றுதான் காலத்தில் வீடு வந்து சேருவது என்ற புதுப் பழக்கம். கண்ணம்மா இருக்கும்போது அநேகமாகத் தினந்தோறும் அவன் வீட்டில் இதுபற்றிப் பேச்சு வார்த்தை நடக்காமல் இருக்காது. சிரித்துக்கொண்டும், சிணுங்கிக்கொண்டும், கோபத்துடனும் கண்ணீருடனும் அவனுடன் வாதாடுவாள்.

''ஒரு ஜன்மம் தனியாக வீட்டில் காத்துக் கிடக்குமே என்ற அக்கறை கொஞ்சமாவது இருந்தால்தானே?'' என்று முகத்தைத் திருப்பிக்கொள்வாள்.

ஒரு நாள் சும்மாவாவது படுத்துக்கொண்டு ஐந்து நிமிஷ நேரம் கதவைத் தட்டி ரகளை பண்ணும்படி ராமலிங்கத்தை — விட்டுவிடுவாள். பிறகு தூங்கிப் போய்விட்டவள்போல் பாசாங்குடன் எழுந்து வந்து கண்களை துடைத்துக்கொண்டே கதவைத் திறந்து விடுவாள். அப்படியும் அவன் திருந்துவதாக இல்லை. ஐந்து மணிக்குக் காரியாலயம் முடிந்தால், பிறகு நண்பர்

களுடன் கண்ட இடமெல்லாம் சுற்றிவிட்டு அவர்கள் அநுமதித்தபோதுதான் வருவான்.

கண்ணம்மா ஊருக்குப் புறப்படுகையில் அவனிடம் இதைத்தான் அழுத்தமாகச் சொன்னாள்: "என்னைப் போலவே சாந்தாவையும் விழித்துக்கொண்டிருக்கும்படி செய்யாதீர்கள். நான் தான் உங்களுக்காக அந்தக் கஷ்டத்தை அநுபவித்தேன். அவள் பாவம் ஒன்றுமே தெரியாதவள்; அப்பாவி. அவளைக் காக்க வைத்திருப்பதும் நல்லதல்ல. இனிமேல் பல விஷயங்களில் நான் வரும் வரையில் நீங்கள் கவனமாயிருக்கவேண்டும்."

கண்ணம்மா சொல்லிச் சென்றது ஒருபுறம் இருக்க, ராமலிங்கத்துக்கே கூடத் தன்னைக் கொஞ்சம் மாற்றிக் கொள்ள வேண்டும் என்னும் கருத்து உதயமாகி இருந்தது. தன்னுடைய உடுப்புகளை முன்போலக் கண்ட இடங்களில் அவன் போட்டுவிடுவதில்லை. தன்னுடைய காரியங்களில் பெரும் பகுதியைத் தானே செய்துகொண்டான். கதைப் புத்தகங்களை அடுக்காக வைப்பது, செய்திப் பத்திரிகைகளை ஒரு மூலையில் ஒழுங்காக மடித்துப் போடுவது, அடிக்கடி மேஜையில் பரப்பிக் கிடக்கும் சாமான்களை அந்த அந்த நிலைக்குக் கொண்டு வருவது முதலிய காரியங்களுக்கு அவன் வேற்று உதவியை எதிர்பார்க்கவில்லை.

நண்பர்கள் இந்த ஒருநாள் மட்டிலும் அவனை விடுவதற்கு மறுத்துவிட்டார்கள். நல்ல இங்கிலீஷ் படம் ஒன்று ஓடிக்கொண்டிருந்தது. பார்த்துவிட்டுத்தான் போக வேண்டுமென்று கட்டாயப்படுத்தி இழுத்துச் சென்றனர்.

படம் முடிந்து வீட்டிற்கு வருவதற்குள் மணி பத்து அடித்துவிட்டது. வாசல் கதவருகில் வந்து நின்று மெதுவாகத் தட்டினான் ராமலிங்கம். தட்டிவிட்டுச் சற்று நேரம் காத்திருந்தான். பிறகு மீண்டும் முன்போலவே மெதுவாகத் தட்டினான். உள்ளே சத்தம் கேட்டது. முனகலும் பெருமூச்சும் கதவுக்கு அப்பாலிருந்து கொஞ்சம் கொஞ்சமாகச் சமீபித்துக்கொண்டிருந்தன. காலடி ஓசை சரியாக ஒலிக்கவில்லை. நாதாங்கி கழன்று விழுந்தது.

கதவைத் திறந்துகொண்டு உள்ளே நுழைந்த ராமலிங்கம், தொடர்ந்து செல்லாமல் அப்படியே நின்றான். தன் எதிரே நடுங்கிக்கொண்டு நின்ற சாந்தாவை உச்சி முதல் உள்ளங்கால் வரை ஏற இறங்கப் பார்த்தான். அவன் பார்க்கும் நேரங்கூட அவளால் அங்கு நிற்கமுடியவில்லை. பல்லைக் கடித்துக்கொண்டு விரித்துக்கிடந்த பாயில் போய்த் தொப்பென்று விழுந்தாள். பக்கத்தில் கிடந்த கம்பளிப் போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டாள். அப்படி இருந்தும் அவள் உடம்பு குளிரால் நடுங்கியது நிற்கவில்லை.

ராமலிங்கம் சட்டையைக்கூட கழற்ற மறந்து அருகில் போய்த் தரையில் உட்கார்ந்தான். சாந்தாவின் நிலையை அவனால் சகிக்க முடியவில்லை. குளிரால் அவள் தேகம் ஆடிக்கொண்டிருந்தது.

"என்ன சாந்தா? என்ன உனக்கு? மத்தியான்னம் நல்லா இருந்தாயே" என்றான்.

அவளால் பதில் சொல்ல முடியவில்லை. கண்களால் பரிதாபமாக ராமலிங்கத்தைப் பார்த்தாள். முனகலும் பெருமூச்சும் பெருகிக் கொண்டுதான் இருந்தன. முனகலை

நிறுத்திப் பதில் சொல்லக்கூடிய நிதானம் அவளிடம் இல்லை.

மத்தியான்னம் நன்றாகத்தான் இருந்தாள். மாலை ஆறு மணி வரையிலும் நன்றாகத்தான் இருந்திருக்கிறாள். இரவுக்காக அவள் செய்துவைத்திருந்த சமையல் ஏற்பாடுகள் இதை ராமலிங்கத்துக்குத் தெரிவித்தன.

ராமலிங்கம் தீப்புகைபோல் அவள் மூச்சு விடுவதைக் கவனித்தான். நெற்றி நெருப்பாகச் சுட்டது. ராமலிங் கத்தின் கை வெந்து போகும்போல அவ்வளவு அதிக மாய்த் தகித்தது, ஜுரத்தின் அனல். அவசரமாக அறைக்குள் நுழைந்து தன்னுடைய போர்வையையும் கண்ணம்மாவின் போர்வையையும் எடுத்து அவளை மூடினான். கதவைச் சும்மா சாத்தி வைத்துவிட்டுத் தனக்குத் தெரிந்த டாக்டரின் வீட்டிற்குச் சென்றான்.

டாக்டர் வந்து மருந்து கொடுத்தார். ஊசி போட்டார். உணவுப் பக்குவம், சிகிச்சை முறை பற்றிச் சொல்லி விட்டுக் கிளம்பினார். ராமலிங்கத்துக்கு ஒன்றுமே ஓட வில்லை. சாந்தாவின் படுக்கையருகிலேயே தூணில் சாய்ந்துகொண்டு உட்கார்ந்துவிட்டான். சுவரில் மாட்டி யிருந்த பெரிய கடிகாரம் பன்னிரண்டு அடித்து ஓய்ந்தது.

சாந்தாவின் முகத்தை உற்றுப் பார்த்தான் ராமலிங்கம். வாடிப்போன அழகிய இளம் ரோஜாவின் மீது பனி பெய்திருப்பதுபோல அவளுடைய புருவங்களிலும் இதழ் களின் அருகிலும் வேர்வை மணிகள் துளித்திருந்தன. கண்களை அவள் மூடியிருந்தாள். சிவப்பும் நீலமும் கலந்த அவளுடைய பரந்த கண்களும், அவற்றின் மத்தியில் அலையும் கருவிழிகளும் இப்போது, பசுமையான வெளி இதழ்களால் மூடப்பட்ட மலர் மொக்குகள்போல்

இமைகளால் மூடப்பட்டுக் கிடந்தன. நீண்டு அடர்ந்த புருவங்கள் வழியாக வேர்வை வழிந்தது.

சாந்தா புரண்டு படுத்தாள். அவள் கண்கள் ராமலிங்கத்தைப் பார்த்தன. போர்வைகளை ஒவ்வொன்றாகக் களைந்துவிட்டு, "நீங்கள் இன்னும் சாப்பிடவில்லையா?" என்றாள்.

இப்போது அவளுடைய ஜுரம் தணிந்திருந்தது. போர்த்திருந்த எல்லாவற்றையும் உதறிவிட்டு, சேலைத் தலைப்பால் முகத்தைத் துடைத்துக் கொண்டாள்.

"சாப்பாட்டிற்கென்ன? மெதுவாய்ச் சாப்பிடுகிறேன். உனக்குக் காய்ச்சல் எப்படி இருக்கிறது?" என்றான் ராமலிங்கம்.

"தேவலாம்; நீங்கள் போய்ச் சாப்பிடுங்கள். எல்லாம் சமைத்து வைத்திருக்கிறேன்" என்றாள் சாந்தா.

"நீ சாப்பிடவேண்டாமா? கஞ்சி, காபி சாப்பிடலா மென்றார் டாக்டர். கஞ்சி வைத்துக்கொண்டு வரட்டுமா?"

"ஒன்றுமே வேண்டாம் எனக்குப் பசிக்கவே இல்லை. நீங்கள் போய்ச் சாப்பிட்டுவிட்டுப் படுங்கள்; நாழிகை

அப்புறமும் அவன் அங்கு உட்கார்ந்திருந்தான். சாந்தாவின் வற்புறுத்தல் அதிகமாகிவிட்டதால், அங்கிருந்து எழுந்து, பெயருக்கு ஏதோ சாப்பிட்டுவிட்டு அவன் படுக்க வேண்டியதாயிற்று. மீதி இருந்த சில நாழிகைப் பொழுதும் அவனுக்கு உறக்கம் வரவில்லை. சாந்தாவின் முனகலையும், லேசான புலம்பலையும் காது கொடுத்துக் கேட்டுக்கொண்டே விழித்திருந்தான்.

# பகல்

சுமார் இரண்டு வருஷங்கள் இருக்கும். மத்தியான்னச் சாப்பாட்டிற்கு வீட்டிற்கு வந்த ராமலிங்கம், உள்ளே நுழையும்போது, வீட்டைவிட்டு வெளியே வந்து கொண்டிருந்த ஒரு பெண்ணைச் சந்தித்தான். அவளுக்காக வழிவிட்டுக் கதவருகில் சற்று ஒதுங்கினான். சாதாரணமான அவனுடைய பார்வை அந்தப் பெண்ணின் மேல் விழுந்தது. ஆனால் அது அவ்வளவு சீக்கிரமாக அவளை விட்டு அகலவில்லை. அவள் பின்னால் ஒரு விநாடி சென்று பிறகுதான் திரும்பியது. ராமலிங்கத்துக்கே இது ஆச்சரியமாக இருந்தது: யாரையும், இதர பெண்களை ஏறிட்டும் பார்க்காதவன், இன்று சில விநாடிகள் அவளுடைய தோற்றத்திலேயே நிலைத்து நிற்கவேண்டி வந்ததே!

குனிந்த தலை நிமிராமல்தான் அவள் சென்றாள். அவளுடைய நடையில் நாணத்தின் பரபரப்பும் கூச்சமும் கலந்திருந்தன. வெகு வேகமாக அவள் சென்று மறைந்தாள். அவளுடனேயே அவளுடைய ஒப்பற்ற சௌந்தர்யமும் ராமலிங்கத்தின் பார்வையிலிருந்து மறைந்தது. ஆனால் அவள் நினைவு மட்டும் மறையவில்லை. அழகென்றாலும் சாதாரண அழகா? ஆயிரத்தில், இல்லை, லக்ஷத்தில் ஒருத்திக்கு இத்தகைய கவர்ச்சி கிடையாதே! அசாதாரண வசீகரம் பொங்கும் இம்மாதிரி அழகிகளை வாழ்வில் எங்கோ இரண்டோர் இடங்களில் தான் சந்திக்க முடிகிறது.

ராமலிங்கத்தின் கற்பனை முற்றும் சரியானதுதான்.

காந்தசக்திக்கு எல்லையே கிடையாது. அப்படிப்பட்ட பூரணமான அழகு எங்கோ அங்கும் இங்குமாய் இரண்டோர் இடங்களில்தான் தன்னுடைய முழுத் திறமையையும் காட்டி இருக்கிறது. ராமலிங்கம் இன்று சந்தித்த அந்தப் பெண் அப்படிப்பட்ட நிறைவான அழகின் இருப்பிடம்.

உள்ளே நுழைந்தவன் கண்ணம்மாவைப் பார்த்து, "யார் அந்தப் பெண்? புதிதாயிருக்கிறதே!" என்றான்.

"அடுத்த வீட்டிற்குக் குடி வந்திருக்கிறார்கள். அவள் புருஷனுக்கு இங்கே ஒரு பாங்கில் கணக்கு வேலையாம். ரொம்ப நல்ல பெண்" என்றாள்.

ராமலிங்கம் அதற்கு மேல் கண்ணம்மாவிடம் ஒன்றும் கேட்கவில்லை. சாப்பிட்டுவிட்டுக் காரியாலயம் புறப்பட்டான். அந்த நாளிலிருந்து அடிக்கடி அந்தப் பெண் கண்ணம்மாவிடம் வந்து போய்க் கொண்டிருந்தாள். அடிக்கடி ராமலிங்கத்தின் கண்களில் பட்டாள். நாளடைவில் ராமலிங்கத்திடம் அவளுக்கு இருந்த வெட்கமும், பரபரப்பும் மறைந்து விட்டன. சாதாரணமாகவே நடந்துகொண்டாள்.

ராமலிங்கமும் அந்தப் பெண்ணைப்பற்றி முதல் நாள் நினைத்ததைவிட அப்புறம் அதிகமாக நினைக்கவில்லை. வானத்து நிலவும், மலர்ந்த தாமரையும் எவ்விதம் ரசிகனின் உள்ளத்தில் மெல்லிய அலையை எழுப்புமோ, அவ்விதச் சுந்தரச் சலனத்தைத்தான் அந்தப் பெண்ணின் அழகு ராமலிங்கத்திடம் ஏற்படுத்தியது. ராமலிங்கத்தை மட்டிலும் அவனுடைய எண்ணங்களுக்குப் பொறுப்பாளியாக்க முடியாது. ரசிகனின் மோன மயக்கத்துக்கு

மனத்தை இழுக்கும் இயற்கையின் எழிலுந்தானே பொறுப்பேற்க வேண்டியது?

நாட்கள் சென்றன. கண்ணம்மாவும் சாந்தாவும்-அது தான் அவள் பெயர் - பிரிக்க முடியாதவர்களாகி விட்டார்கள். கூடப் பிறந்த சகோதரிகளிடம் காண முடியாத பாசம் அவர்களைப் பிணைத்துவிட்டது. ஒன்று, ராமலிங்கத்தின் வீட்டில் சாந்தா இருப்பாள்; அல்லது கண்ணம்மா அவள் வீட்டிற்குச் சென்றிருப்பாள். இவர்கள் இருவரிடையே இருந்த உறவு மெதுவாக அந்த இரு வீட்டு ஆண்பிள்ளைகளையும் பற்றத் தொடங்கியது. சாந்தாவின் புருஷன் சங்கரன் ராமலிங்கத்துடன் பழகத் தலைப்பட்டான். பக்கத்து வீட்டுக்காரர்கள் இவ்விதம் நெருங்கிய சிநேகிதர்களாகிக்கொண்டு வந்தார்கள்.

ராமலிங்கம் வாழ்க்கையை உல்லாசமாகக் கழிக்க விரும்புகிறவன். உல்லாசம் என்றால் ஆடம்பரமாக அல்ல. கிடைத்திருக்கும் வாழ்வைக் கூடியவரையில் சந்தோஷமாகக் கழிக்கும் தன்மை உடையுவன். விடுமுறை நாட்களில் கண்ணம்மாவை அழைத்துக் கொண்டு வெளியே புறப்படுவான். சினிமா, கோயில், 'பார்க்' இங்கெல்லாம் சென்று வருவது அவன் வழக்கம். பக்கத்துக் கிராமங்களில் நண்பர்கள் வீட்டுக்கு அடிக்கடி கண்ணம்மாவுடன் போய் வருவான். அதேபோல் மற்ற வர்களுடைய வருகையும் இங்கு இருக்கும்.

இப்போது ராமலிங்கத்தின் உல்லாச வாழ்வுக்கு ஒரு துணைக் குடும்பமும் கிடைத்தது. லீவு நாட்களில் சங்கரன் தம்பதிகளும் அவர்களுடன் ஒன்று சேர்ந்து கொண்டார்கள். வெளி வாழ்வுக்கு மட்டிலுமல்லாமல்,

உதவிக்கொண்டார்கள். பாலுக்குச் சீனி கிடைக்காத சமயங்களில் சங்கரன் வீட்டுச் சீனி ராமலிங்கத்திற்கு உதவும். காபித்தூள் இல்லாவிட்டால் பரக்கப் பரக்கப் போய்க் கண்ணம்மா வீட்டில் எடுத்து வருவாள் சாந்தா. எத்தனையோ வருஷ காலமாய்ப் பழகியவர்கள் போலவும், ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் போலவும் அவர்கள் நடந்துகொண்டார்கள்.

"சாந்தா, பாவம்! அவளைப் பற்றியெல்லாம் இப்போது தான் சரியாக விசாரித்தேன். அவளுக்குப் பிறந்த இடத்திலும் ஆதரவு இல்லை; புகுந்த இடத்திலும் கிடையாது. புருஷன் மட்டிலுந்தான் அவளுக்கு இப்போது உற்றார் உறவினர் எல்லாம். அவருக்கும் அப்படித்தானும். வேறு யாரும் கிடையாதாம்" என்றாள், ஒருநாள் கண்ணம்மா.

"அதனால்தான் அப்படி நம்மீது அளவற்ற பிரியத்தோடு இரண்டுபேருமே நடந்து கொள்ளுகிறார்கள். உலகத்தில் மனிதர்களுக்கு அன்பு செலுத்தவென்று யாராவது சிலர் இருக்கவேண்டும், உற்றாராக இருந்தாலும் சரி, சிநேகிதர்களாக இருந்தாலும் சரி" என்றான் ராமலிங்கம்.

"ஆமாம்; என்மீது உயிரையே வைத்திருக்கிறாள் சாந்தா" என்றாள் கண்ணம்மா.

சாந்தாவின் கணவன் சங்கரன் ஒருநாள் தலையைக் கீழே தொங்கவிட்டுக்கொண்டு பாங்கிலிருந்து வீட்டிற்கு வந்தான். "கல்கத்தாவுக்கு என்னை மாற்றிவிட்டார்கள்; உடனே போய் அங்கே பொறுப்பை ஏற்றுக்கொள்ள வேண்டுமாம்" என்று உத்தரவைச் சாந்தாவிடம் நீட்டினான். சாந்தா இடிந்துபோய்ப் பேச்சு மூச்சற்று

அவளை ஒன்று சேர்ந்து படையெடுத்தன. உத்திரவில் கண்ட எழுத்துக்கள் பூதாகாரமாய் அவளுக்குத் தோன்றின.

வேறு வழி இல்லை. கண்ணம்மாவின் ஆதரவு சாந்தாவுக்குத் தைரிய மூட்டியது. சங்கரனின் நம்பிக்கையும் ராமலிங்கத்தின் பெருந்தன்மையும் ஒரு முடிவுக்கு வரச் செய்தன. "வீடு பார்த்துக்கொண்டு சாந்தாவை அழைத்துக்கொள்கிறேன். முடிந்தால் இங்கேயே திரும்பவும் வர முயலுகிறேன். முடியாவிட்டால் நடப்பது நடக்கட்டும். இரண்டு மூன்று மாதங்களுக்குள் வந்து விடுகிறேன்; சாந்தாவைப் பார்த்துக் கொள்ளுங்கள்" என்று சொல்லி ராமலிங்கத்தின் வீட்டில் சாந்தாவை விட்டுப் புறப்பட்டான் சங்கரன்.

கண்ணம்மா தாயாகிக் கொண்டிருந்த சமயம் அது. ஏழு மாதங்கள் ஆகியிருந்தன. பிறக்கப் போவதுதான் முதல் குழந்தை. சாந்தா ஓடி ஓடி வீட்டு வேலைகளை எல்லாம் செய்தாள். கண்ணம்மாவை அன்புடன் கடிந்து கொண்டு, அவளைச் சும்மா இருக்கும்படி சொல்லிவிட்டு எல்லா வேலைகளையும் தன் தலையிலேயே போட்டுக் கொண்டாள். ஏழாவது மாதம் வளைகாப்புக்குக் கண்ணம்மாவின் பிறந்த வீட்டார் இங்கேயே வந்திருந்து எல்லாக் காரியங்களையும் செய்தார்கள். அந்த நிகழ்ச்சியில் பெரும் பங்கு சாந்தாவுக்கு. அத்தனை உறவினர்கள் மத்தியிலும் உறவில்லாத அந்த ஒருத்திதான் நடு நாயகியாக விளங்கினாள். அவளுடைய அழகென்னும் காந்தம் அங்கிருந்த அனைவரையும் அவள் பால் இழுத்தது. கண்ணம்மாவின் தாய், பாட்டி, தங்கை, தம்பிகள் முதலிய அனைவரும் ஏனோ சாந்தாவின் புரியாத வலைக்குள்,

அவளாக விசாத வலைக்குள் அகப்பட்டுக் கொண்டனர். குழந்தைகள் "அக்கா, அக்கா" என அவளைச் சூழ்ந்து கொண்டன. பெரியவர்களும், கிழவர்களும் அவளை அன்புடன் நோக்கினார்கள். அவள் எதையுமே கவனிக்காமல் தன்பாட்டில் காரியத்தில் கவனமாக இருந்தாள்.

"கண்ணம்மா இங்கேயே இருக்கட்டும், அம்மா! பிரசவத்திற்கு நீங்கள் இங்கே வந்து விடுங்கள். இங்கே இருந்தால் நானும் உடன் இருப்பேன் அல்லவா?" என்றாள் சாந்தா, கண்ணம்மாவின் தாயிடம். என்ன இருந்தாலும் பெற்ற மனம் கேட்குமா?

கடைசியாக ஒன்பதாவது மாதம் கண்ணம்மாவைப் பிறந்த இடத்திற்கு அழைத்துச் செல்வதாகப் பேசி அப்படியே அழைத்தும் சென்றார்கள். கண்களில் கண்ணீருடன் விடை கொடுத்தாள் சாந்தா. "பிறந்தவுடன் எனக்குத் தகவல் கொடுக்கச் சொல்; பத்து நாட்களில் புறப்பட்டு வந்துவிடு" என்று விடை கொடுத்தாள்.

கண்ணம்மா தன் கணவனைப் பார்த்துக்கொள்ளும் பொறுப்பைப் பற்றிச் சாந்தாவிடம் ஒன்றும் சொல்லவில்லை. அவளுக்குத் தெரியும், சாந்தாவின் போக்கு. இந்த இரண்டு மாத காலத்தில் அவள் எல்லாமே தெரிந்து வைத்திருந்தாள். அவளிடம் சொல்வது அநாவசியம் என்று இருந்துவிட்டாள். ஆனால் ராமலிங்கத்திடம் அப்படியில்லை. "சாந்தாவுக்கு அநாவசியமான வேலைகள் வைக்கக்கூடாது. உங்கள் வேலைகளை நீங்களே பார்த்துக் கொள்ளவேண்டும்; நேரத்தில் வீடு திரும்பவேண்டும்." இம்மாதிரிப் பல விஷயங்கள் சொல்லிச் சென்றாள்.

இப்போது........

கண்ணம்மா இருந்த வீட்டில் சாந்தா இருந்தாள்.

சாந்தாவுடன் அவளுடைய எல்லையற்ற அழகும் அந்த வீட்டின் தனிமையும் இருந்தன. அந்த அழகை ஆரம்பத்தில் கண்டு பிரமித்தவனும், அதை மாசற்று உபாசிக்க விரும்பினவனுமாகிய ராமலிங்கமும் அங்கே இருந்தான்.

அழகு தன்னுடைய ரம்மியமான காந்த அலைகளை அந்த வீட்டிற்குள்ளே எதையும் கவனிக்காமல், அதன் சொந்தக்காரியைக்கூட கேட்காமல், தன் போக்கில் வீசிக்கொண்டிருந்தது.

இதற்கிடையில், இந்த ஒருமாத முடிவுக்குள் கண்ணம்மாவுக்கு ஆண் குழந்தை பிறந்த செய்தியும் வந்துவிட்டது. ராமலிங்கம் சென்று பார்த்து வந்து, "குழந்தை அவள் அம்மாவைப்போல் இருக்கிறான்" என்றான் சாந்தாவிடம். அப்போது சாந்தாவின் முகத்தில் பொங்கிய பூரிப்பையும் பெருமிதத்தையும் பார்க்க வேண்டுமே!

"வீட்டில் எல்லோரும் உன்னைத்தான் விசாரித்தார்கள். கண்ணம்மா கூட உன்னைக்கூட்டி வந்திருக்கலாமே என்றாள். குழந்தைகள் சரளி, மீனு, ராஜு எல்லாம் 'எங்க சாந்தா அக்காளை ஏன் விட்டுவிட்டு வந்தீங்க?' என்று என்னை நச்சரிக்கத் தொடங்கிவிட்டார்கள்" என்றான்.

அங்கிருந்த அத்தனை பேரையும் இந்தச் சாந்தா எப்படி எந்த ஆகர்ஷண சக்தியினால், இங்கு அவர்கள் வந்திருந்த இரண்டு மூன்று நாட்களில் கவர்ந்து விட்டாள்? சாந்தாவின் முகத்தையே பார்த்தான் ராமலிங்கம். சாந்தாவுக்கு ராமலிங்கம் கூறியவை அளவுக்கு மீறிய மகிழ்வைக் கொடுத்தன. ஆனால் அடுத்த கணம் ஏனோ அவள் பெருமூச்சு விட்டாள். தனக்கென்று ஓர் உறவும் சுற்றமும்

இல்லாததை நினைத்தா? தன் கணவன் கண்காணாத இடத்தில், ஓய்வு ஒழிச்சல் இன்றி வாழ்க்கையில் போராடுவதை நினைத்தா? எத்தனை தினங்களுக்குத்தான் இப்படிப் பற்றற்ற முறையில் வாழ்வு கழியும் என்பதை எண்ணியா?

# இரவு

திடீரென்று ஜுரத்தால் படுத்துக்கொண்ட சாந்தா இரண்டு மூன்று நாட்கள் வரையில் படாதபாடு பட்டு விட்டாள். ஒவ்வொரு நாளில் ஏதாவது ஒரு வேளையில் பொறுக்க முடியாதபடி ஜுரம் வந்து பிறகு தணிந்து கொண்டிருந்தது. ராமலிங்கம் காரியாலயம் போகவில்லை. லீவு எழுதிப் போட்டு விட்டான். "நான் பார்த்துக் கொள்கிறேன்; நீங்கள் போய் வாருங்கள்" என்று சாந்தா சொல்லிப் பார்த்தாள். அவன் கேட்கவில்லை.

அடுக்களைப் பக்கமே போய் அறியாத ராமலிங்கம் புதிது புதிதாகக் கஞ்சி வைக்கவும் காபி போடவும் கற்றுக் கொண்டான். ஒரு சீசா மண்ணெண்ணெயையும் ஒரு பெட்டி தீக்குச்சிகளையும் காலிசெய்து அடுப்புப் பற்ற வைத்தான். பழைய காகிதக் கட்டுகளை எல்லாம் கொண்டு வந்து போட்டு வெந்நீர் காய்ச்சினான். அவனுடைய செய்கைகளைப் பார்த்துச் சாந்தாவுக்கு ஒரு புறம் சிரிப்பும், ஒருபுறம் கண்ணீருமாக வந்தன. கீழே படுக்கையில் கிடந்தவாறே அவன் போவதையும் வருவதையும் வேடிக்கையாகப் பார்த்துக்கொண்டிருந்தாள். அப்படிப் பார்த்திருப்பதில் அவளுடைய துன்பங்கூட மறைந்து வருவதாக அவளுக்குத் தோன்றியது.

ராமலிங்கத்தின் முகத்தில் புன்சிரிப்பை வரவழைப்பதற்கென்றே நாலைந்து நாட்களுக்குள் சாந்தா சுகமடைந்து விட்டாள்; என்றாலும் அதிகமாக அவளை அலட்டிக் கொள்ள வேண்டாமென்று சொல்லியிருந்தான் ராமலிங்கம். அவன் வீட்டு வேலைகளில் அவள் வேண்டாமென்று சொல்லச் சொல்ல உதவிகள் செய்தான். இப்போதெல்லாம் அவன் வேலை நேரத்தில் மட்டும் காரியாலயம்; காரியாலயம் விட்டவுடன் வீடு. வேறு எந்தப் பொழுது போக்கையும் அவன் விரும்பவில்லை.

ஒருநாள் காலையில் காரியாலயம் புறப்படுவதற்காகத் தன் அறையின் மேஜை முன் நின்று தயார் செய்துகொண்டிருந்தான். மேஜை மீது இருந்த பெரிய நிலைக் கண்ணாடியில் அவன் உருவம் தெரிந்தது. அடங்காமல் கிடந்த கிராப்புத் தலையை சிரமப்பட்டு வாரிக்கொண்டிருந்தான். பல தடவைகள் சீப்பிற்குப் பணிந்துகொடுத்தும் அவனுடைய முன்புறத் தலைமயிர், சீப்பை எடுத்தவுடன் நெற்றியில் விழுந்து அசையத் தொடங்கியது. வேடிக்கையாகவே அதைச் சரி செய்யும் வேலையில் அவன் தொடர்ந்து ஈடுபட்டிருந்தான்.

அறையைச் சாந்தா கூட்டிக்கொண்டிருந்தாள். அவள் கூட்டும் சத்தத்தைக்கூட ராமலிங்கம் கேட்கவில்லை. அந்தச் சத்தம் தானாகவே ஒரு கணம் ஓய்ந்தது. கீழே கிடந்த ராமலிங்கத்தின் சட்டைப் பொத்தானை எடுத்து மேஜையின் மேல் மெதுவாக வைத்தாள் சாந்தா. அப்படி வைக்கும்போது அவள் பார்வை எதிரே இருந்த நிலைக் கண்ணாடியில் பதிந்தது. கண்ணாடியில் தெரிந்த அவன் உருவத்தின் கண்களைச் சாந்தா சந்தித்தாள். சாந்தாவின்

உருவமும் கண்ணாடிக்குள்ளிருந்து ராமலிங்கத்தை நோக்கியது. இரண்டு உருவங்களுமே ஒரு விநாடி மின்வெட்டில் அதிர்ச்சி அடைந்தவை போல் கண்ணாடிக்கு உள்ளும் புறமும் நடுங்கின. சாந்தாவின் இமைகள் தாழ்ந்து, அவள் அந்த இடத்தை விட்டு அகன்றாள். அதற்கப்புறம் நிதானத்துடன் அவள் அந்த அறையைச் சுத்தப் படுத்த முயன்றது முடியவில்லை.

ராமலிங்கம் தன் நெற்றியில் வந்து விழுந்த சுருட்டை மயிரை அதன் போக்கில் விட்டுவிட்டான். சிப்பையும் ஒரு மூலையில் எறிந்தான். கண்ணாடியில் அவள் உருவம் தோன்றி, பிறகு மறைந்து, இப்போது காலியாகக் கிடக்கும் அந்தப் பாழ்வெளியைப் பார்த்தான். கண் இமைக்காது பார்த்தான். உடனே தன்னையும் பார்த்துக்கொண்டான். அப்போதுதான் அவனுக்கு தன்னைப் பற்றிய, தன் தோற்றத்தைப் பற்றிய நினைவே எழுந்தது. ஆம், அவனும் அழகனாகத்தான், திடகாத்திரமுள்ள, கவர்ச்சிகரமுள்ள வாலிபனாகத்தான் இருந்தான்! இதை இத்தனை நாள் மறந்துபோயிருந்த அவனுக்குக் கண்ணாடி இன்று நினைவூட்டியது.

காரியாலயத்தில் அவனுக்கு அன்று ஒன்றிலுமே ஒட்டம் இல்லை. அவன் போன இடமெல்லாம் கண்ணாடியில் தெரிந்த நிழலுருவம், அதன் கண்கள் அவனையே பார்த்தன. அதை நினைக்கும் போதெல்லாம் அவன் நடுங்கினான். ஆனால் அவனால் நினைக்காமலோ, நினைவின் முடிவில் நடுங்காமலோ இருக்க முடியவில்லை.

சாயங்காலம் அதே கண்ணாடியின் முன்புவந்து உட்கார்ந்துகொண்டான். உடைகளை வழக்கம்போல் கழற்றவில்லை.• குழாயடிக்குச் சென்று முகம் கைகால்

அலம்பவில்லை. அருகே கிடந்த துண்டினால் முகத்தைத் துடைத்துக்கொண்டு விரித்துக் கிடந்த பத்திரிகையைப் படித்துக்கொண்டிருந்தான். கதையின் ஆரம்பம் இரண்டு பக்கங்களுக்கு முன்னால் இருந்தது. அதைப்பற்றி அவனுக்கு அக்கறை இல்லை. கண்ணெதிரே தெரிந்த எழுத்துக்களை வாய்க்குள் படித்துக்கொண்டான். கதையின் மத்தியில் கவிதை என்பதால் பாரதியின் இருவரிகள் கொட்டை எழுத்துக்களில் போடப்பட்டிருந்தன:

**"............................ நின்றன்**
**மோடி கிறுக்குதடி தலையை — நல்ல**
**மொந்தைப் பழையகள்ளைப் போல."**

வாயைத் திறந்து அந்த வரிகளை முணுமுணுத்தான். கவிதையின் போதை, அதன் கருத்தின் போதை விஷத்தின் வேகத்தில் அவன் ரத்தத்தில் கலந்தது. சாந்தா வருகிற ஓசை கேட்டது. திரும்பினான். காபியைக் கொண்டு அவள் குனிந்த தலை நிமிராமல் வந்து கொண்டிருந்தாள். காபியை அவள் மேஜை மீது வைக்கப்போனாள். ராமலிங்கம் கரங்களை நீட்டினான். நீட்டிய கரங்கள் நடுங்கினவோ அல்லது கொடுத்த தளிர்க் கரங்கள் நடுங்கினவோ தெரியவில்லை. காப்பிப் பாத்திரமும் தம்ளரும் கீழே பலத்த ஓசையுடன் விழுந்தன. காபி கீழே ஓடியது. சில துளிகள் இருவரது உடையிலும் தெறித்துக் கறையை ஏற்படுத்தின. காபிக் கறையை உடனே அலம்பாவிட்டால் சுலபத்தில் மறையாதல்லவா?

சாந்தா திரும்பினாள். பாத்திரங்களை எடுத்துக்கொண்டு அவள் கதவருகில் போகுமட்டும் பார்த்துக்கொண்டிருந்தான் ராமலிங்கம். பிறகு, "சாந்தா!" என்றான் கலங்கிப் போயிருந்த குரலில்.

சாந்தா திரும்பினுள்; ஏறிட்டுப் பார்த்தாள்; "ஏன்?" என்ருள்.

உடனே பதில் சொல்ல ராமலிங்கம் தன்னைத் தயார் செய்து கொள்ளவில்லை. ஏன் கூப்பிட்டோம் என்பது அவனுக்கே தெரியாது. உடனே சமாளித்துக் கொண்டான்.

"இல்லை. உனக்கு வைத்திருக்கும் காபியைத் திரும்பவும் கொண்டு வராதே. நான் கடையில் போய்க் குடித்துக் கொள்கிறேன்" என்ருன்.

"இல்லை, வேண்டாம்; காபி இருக்கிறது" என அவள் திரும்பவும் கொண்டு வந்தாள். அந்தக் காபியை ராமலிங்கம் குடித்தபோது அதில் போதிய பாலோ சர்க்கரையோ இல்லை. அதைத்தான் இத்தனை நாட்களும் சாந்தா குடித்து வந்திருக்கிருள்!

இரவு வந்தது......பகலையும், அறிவையும் தன்னுடைய கரிய கனத்த போர்வையால் போர்த்துக்கொண்டு, கற்பனை களின் சிகரமான புரியாத வலையை வீசிக்கொண்டு சந்திரன் உதித்தான். உணர்ச்சிக் கிரணங்கள் அவனிடமிருந்து உதிரத் தொடங்கின.

தன் அறையின் கட்டிலில் ராமலிங்கம் படுத்திருந்தான். ஜன்னல் கதவுகள் எல்லாம் திறந்துதான் இருந்தன. அவற்றினூடே விழுந்த ஒளி தண்மை உடையதாக இல்லை. சூரியனின் கதிர்களைவிட அதிகமான அனல் உமிழ்ந்தது. சந்திரன் ஒளியில் எங்காவது இத்தனை நெருப்பு இருப்பதுண்டா? காற்றும் வீசவில்லை. நிச்சப்த மாக, ஏக்கமும் குழப்பமும் உள்ளதாக அந்தப் பொழுது வளர்ந்தது.

ராமலிங்கம் கட்டிலில் எழுந்து உட்கார்ந்தான். சுவரில் இருந்த கடிகாரத்தைப் பார்த்தான். சரியாக நடு இரவு பன்னிரண்டு மணி. நிலவொளியைத் தவிர அந்த அறையில் விளக்கு ஒன்றும் எரியவில்லை. நிலவு பூரணமாக இருந்ததால், பகல் பொழுதில் மங்கின வேளையில் இருப்பது போலவே அறை இருந்தது. அறையைச் சுற்றிலும் நோக்கிவிட்டு, எதிரே தெரிந்த சாந்தாவின் இருட்டறையைப் பார்த்தான். அதில் இருள் நிறைந்திருந்தது. நிலவொளி கொஞ்சங்கூட அதில் புகவில்லை. சுவரில் மாட்டியிருந்த படுக்கை அறை விளக்கு மிகவும் சிறியதாக இருந்தது. மின்மினிப் பூச்சிபோல் தன் இடத்தை மட்டிலும் காட்டிக்கொண்டு அது கண் சிமிட்டியது. அதன் ஒளியால் அந்த அறைக்கு எவ்விதப் பயனும் காணவில்லை. அந்த இருளுக்குள் எங்கோ ஓர் இடத்தில், கோரைப்பாய்ப் படுக்கையில் சாந்தா படுத்துக் கிடந்தாள். அவள் உறங்கும் வேளையிலும் அவள் அழகு உறங்கவில்லை. அது சுடர் விட்டுக்கொண்டுதான் இருந்தது. யார் கண்டார்கள், ஒருவேளை அவளும் சரியாகத்தான் உறங்கினளோ என்னவோ?

ராமலிங்கம் நடந்தான். உறக்கத்தில் நடக்கும் வியாதி சிலருக்கு ஏற்படுவது உண்டாம். அந்த வியாதியஸ்தனைப் போல் ராமலிங்கம் நடந்து சாந்தாவின் அறைக்குள் சென்றான். அவள் படுக்கையை ஒட்டிப் பெரிய பீரோ ஒன்று இருந்தது. அதற்குப் பின்னால் கொஞ்சம் இடைவெளி காணப்பட்டது. ராமலிங்கத்தின் நெஞ்சுக்குள் உளி ஒன்று இருந்து செதுக்குவதுபோல் இருந்தது. வெகு வேகமாக அந்த உளி ராமலிங்கத்தின் நெஞ்சைப் பிளந்துகொண்டிருந்தது. இதே மாதிரி வேகத்தில் இன்னும் சில நிமிஷங்கள் அந்த உளியின் செதுக்கல்

இருக்குமானால் அவன் இருதயம் இரண்டாகப் பிளந்து ரத்தம் வெளியில் பீரிட்டுச் சொரிவது நிச்சயம்.

"கிணீர்........!"

ராமலிங்கத்தின் காலில் ஒரு வெண்கலத் தம்ளர் தட்டுப்பட்டது. சத்தமிட்டுக்கொண்டே அது உருண்டது. கொஞ்சம் தண்ணீரும் அதில் இருந்திருக்கவேண்டும். தரையையும் ராமலிங்கத்தின் காலையும் அந்த நீர் நனைத்தது.

பதறிப்போன ராமலிங்கம் அந்தப் பீரோவின் பின்புறம் மறைந்தான். சாந்தா சாவதானமாக எழுந்தாள். சத்தத்தின் சலனம் அவளை நிதானமாகவே பாதித்தது. எழுந்து தம்ளரைப் பார்த்தாள். கொட்டிக் கிடந்த நீரையும் தன் கரத்தால் உணர்ந்தாள். சுற்றுமுற்றும் பார்த்தாள். மெதுவாக எழுந்து நாலுபுறமும் விழிகளை அலைய விட்டாள். அவள் கண்களுக்குப் பீரோவின் பின்புறம் நின்ற ராமலிங்கம் புலப்படவில்லை.

ராமலிங்கத்தின் அறையை நோக்கி மெல்ல நடந்தாள். தன் அறைக் கதவருகில் நின்றவாறே அவனுடைய படுக்கையைக் கவனித்தாள். நிலா வெள்ளத்தில் அந்தப் படுக்கை நன்றாகத் தெரிந்தது. அதற்கு உரியவன் அங்கு இல்லை என்பதையும் அது சொல்லிற்று. அங்கேயே நின்றுகொண்டிருந்தாள் சிலைபோல, அழகாக; நிழல் உருவத்தின் சுந்தர பிம்பம்போல. அவன் அங்கு இல்லாதது கண்டு அவள் பெருமூச்சு விட்டாள். எங்கே அவன்? ஏன் இந்தச் சத்தம்?

ராமலிங்கம் பீரோவின் பின் பக்கத்திலிருந்து வெளியே வந்தான். நடந்தான். நடை ஓசை கேட்டு சாந்தா திரும்பினாள். அவள் எதிரேபோய் ராமலிங்கம் நின்றான். இருளில் அந்த இருவர் கண்களும் சந்தித்தன. விழிகள்

உடனே சாந்தா தாழ்த்திக்கொண்டாள். ஆனால் இருவரில் ஒருவரும் விலகாமல், வழிவிடாமல், பேசாமல், மௌனமாக அந்த இரவின் சூன்யத்தில், இருளின் அடிவயிற்றில் நின்றுகொண்டிருந்தார்கள்.

இருளின் மத்தியில் ஒரு சிறு ஒளிச்சிதர்.

ஓட்டுக் கூரையின் இடுக்குகளை ஊடுருவிக்கொண்டு ஒரு கிரணம் உள்ளே பாய்ந்தது. சந்திரன் உச்சிக்கு வந்த பிறகுதான் அந்தக் கதிர் உள்ளே நுழைந்திருக்க வேண்டும்.

மின்னல் கீற்றுப்போல் பாய்ந்துவந்த அந்த ஒளி சாந்தாவின் மார்பகத்தில் படிந்தது. அதை அவளும் பார்த்தாள்; அவனும் பார்த்தான். இருவரும் தீயை மிதித்தவர்போல் நடுங்கினர். அந்த ஒளியும் அவளுடன் நடுங்கியது. ஒளியால் அலங்கரிக்கப்பட்ட அந்த மார்பில் விளங்கிய அவளுடைய மாங்கல்யம் அந்த ஒளியை உண்டு சுடர்விட்டது.

மாங்கல்யம் .........அதன் மேல் மங்காத நிலவொளி! அதைக் காட்டுவதற்கென்றே வானத்திலிருந்து குதித்து வந்த தூதுவன்போல ......

சாந்தா விலகினாள். ராமலிங்கம் சென்று ஆணி வேரற்ற மரம்போல் கட்டிலில் சாய்ந்தான். சாந்தா, ஒளியுணர்த்திய அந்தப் புனித வஸ்துவை எடுத்துக் கண்களில் ஒத்திக்கொண்டு படுக்கையில் விழுந்தாள். கண்களில் நீர் அலையோடியது.

## பகல்

பலபலவென்று விடிந்தது. பைத்தியம் பிடித்த நிலையில் ராமலிங்கம் இருந்தான். ஆனால் சாந்தா, ஒன்றுமே

நடக்காததுபோல் ஒன்றுமே அறியாதவள்போல் இருந்தாள். வழக்கம்போலக் காபிவந்தது''சாப்பிடுங்கள்!'' என உத்தரவு போடும் தோரணையில் ராமலிங்கத்திடம் சொன்னாள். அவன் சாப்பிட்டுக்கொண்டிருக்கும்போதே வாசலில் 'ஜல், ஜல்' என்ற சத்தத்துடன் வண்டி வந்து நின்றது. கையில் நிலவொளியில் செய்த பதுமைபோல ஆண் குழந்தையை ஏந்திக்கொண்டு உள்ளே நுழைந்தாள் கண்ணம்மா.

சாந்தா ஓடோடியும் சென்றாள். பிள்ளையை வாங்கி முத்தமிட்டாள். குதித்துக்கொண்டே ராமலிங்கத்திடம் ஓடிவந்து, ''ராஜா வந்துவிட்டான்; பாருங்கள்; கண்ணம்மா வந்துவிட்டாள்'' என்றாள். சந்தோஷமும் குதூகலமும் அவள் பேச்சில், அசைவில், முகத்தில் குலுங்கின.

அதே சமயம் மற்றொரு வண்டியும் வாசலில் வந்து நின்றது. பெட்டி படுக்கையுடன் உள்ளே நுழைந்தான், சாந்தாவின் கணவன் சங்கரன். குழந்தையைத் தூக்கிக் கொண்டே அவனிடம் ஓடி, ''வாருங்கள்; மாமாவைப் பாரடா, ராஜா! ஏன் இத்தனை நாளென்று அவரைக்கேள்! நீ வந்த பிறகுதான் அவரும் வரவேண்டுமென்று இருந்தாரோ?'' என்றாள்.

பட்டப்பகல். ஒளிப்பெருக்கு அங்கே அலைமோதியது.

குழந்தையை வைத்துக்கொண்டு வீட்டின் ஒரு மூலையில் கொஞ்சிக்கொண்டிருந்தனர், ராமலிங்கமும் கண்ணம்மாவும்.

சங்கரனின் அன்புப் பிடியில் அகப்பட்டு சந்தோஷ மிகுதியால் ஆனந்தக்கண்ணீர் சொரிந்துகொண்டிருந்தாள் அழகணங்கு சாந்தா மற்றோர் புறம்.

இரண்டு நாட்கள் சென்றன. சங்கரன் சாந்தாவை அழைத்துக்கொண்டு வெளியூருக்குச் சென்ருன். ராம லிங்கத்தின் வேஷ்டியிலும், சாந்தாவின் சேலையிலும் படிந்திருந்த காபிக்கறை நாளடைவிலே அழிந்து மறைந்து விட்டது.

# அழகு எங்கே?

உலகமே அன்றைக்கு மகிழ்வால் மலர்ந்து பொங்கிக் கொண்டிருந்தது. வாசஸ்பதியும் பாமதியும் அப்படித்தான் நினைத்தார்கள். ஆஸ்ரமத்திற்கு அடுத்தாற்போல் அதை வளைத்து அணைத்து ஓடும் ஆற்று நீரிலே, அன்றைக்கு என்றுமில்லாத ஒரு துள்ளல் இருந்தது. அதன் சலசலப்பிலே உருவமும் கருத்துமுள்ள ஒரு அற்புதமான பாட்டை அவர்கள் உற்றுக்கேட்டார்கள். ஆஸ்ரமத்தைச் சூழ்ந்திருந்த தென்னந் தோப்பில், சொல்லிவைத்தாற்போல் அத்தனை மரங்களும் அன்றுதான் பூத்து விரித்து தங்கள் மணி மலர்களைப் பாளைகளிலிருந்து சிதறினவோ என்று அவர்களுக்கு வியப்பாயிருந்தது.

ஆம், அவர்கள் அன்றுதான் உலகத்தைப் பருவக் கண்களோடு பார்த்தார்கள். ஏனெனில் அன்றுதான் அவர்கள் இருவரின் கண்களும் முதல் முறையாக ஒன்றையொன்று ஊடுருவி கனவுக் கடலில் மூழ்கி முத்தெடுத்து வந்தன.

துஷ்யந்தன் சகுந்தலையை முதல் முறையாகக் கண்டான். காதல் கொண்டான். சகுந்தலையும் அப்படியே. ஆனால் வாசஸ்பதி விவரம் தெரிந்த நாளில் இருந்து அந்த ஆஸ்ரமத்தில்தான் இருக்கிறான். அவனுக்குப் புதியவளல்ல பாமதி. அவனுடைய அருமைக் குருவின் ஒரே குமாரி. தாயற்றவள். தாயும், தந்தையும், குருவுமாக விளங்கிய அந்த முனிவரின் பரிபூரண அன்பைப் பெற்றவள்.

ஆஸ்ரமத்திற்குப் பல மாணவ மாணவிகள் வந்தார்கள்; பயின்றார்கள். உற்ற காலத்தில் கல்வி முடிந்து திரும்பினார்கள். இப்போது அவருடைய ஒரே மாணவன் வாசஸ்பதி. அவனுக்குச் சமீபத்தில்தான் கல்வி முடிந்தது. ஆனால் முனிவர் அவனுக்கு விடை கொடுக்கவில்லை. அவனாகவே துணிந்தும் அதைக் கேட்க வில்லை. பெற்றோரை இழந்தவன் அவன் என்பதும் முனிவருக்குத் தெரியும். அவனுடைய அறிவையும், ஆற்றலையும், அடக்கத்தையும் அவர் நன்கு அறிந்திருந் தார். அதே காரணத்தாலோ என்னவோ அவருக்கு அவன் மேல் தனி அன்பிருந்தது. பாமதிக்கு அடுத்த இடத்தை அம்முனிவர் உள்ளத்தில் வாசஸ்பதி வகித்து வந்தான்.

முன்பெல்லாம் பாமதி சின்னஞ்சிறுமியாய் இருந்தாள். ஆஸ்ரமத்து மானைப் போலவும், மயிலைப் போலவும், கிளியைப் போலவும் அவைகளுடனேயே வளர்ந்தாள். வகுப்பில் அவளுக்கிருந்த கல்வியின் ஆற்றல் அனைவரை யும் பிரமிக்க வைத்தது. குருவின் வார்த்தைகள் அப்படியே அவள் நெஞ்சில் பதிந்தன. திரும்பவும் அவற்றை அவள் சொல்லும்போது ஒரு புது வேகமும், ஒரு தனித் தெளிவும், விளக்கமும் அவற்றில் ஒலித்தன. குருவின் குமாரி என்றதால் மாத்திரம் அவளுக்கு அங்கே மற்றவர்கள் தனிப் பரிவு காட்டவில்லை. அவளுடைய அறிவின் காம்பீர்யத்திற்கு மற்றவர்கள் தங்களையறியா மலே கண்ணியமாக வழிவிட்டு நின்றார்கள். முனிவர் பாமதியை நினைக்கும்போதெல்லாம் தம் மனைவியை நினைத்துக்கொள்வார். அத்தகைய உத்தமியின் குணமும், தமது அறிவும் ஒன்று கலந்தவள் பாமதி எனத் தீர்மானித் துப் பூரிப்படையும், அவர் இதயம்,

## 2

சூன்யம் என்றால் என்ன என்பதை வாசஸ்பதி இன்று தான் கண்டான். நண்பர்கள் இருந்தார்கள்; சென்று விட்டார்கள். பாடம் நிறைய இருந்தது படிப்பதற்கு; தீர்ந்து விட்டது. உடனழைத்துக்கொண்டு உல்லாசமாக மாலை வேளைகளில் சுற்றி வருவதற்கோ, இலக்கியத்தின் சந்தேகங்களைப்பற்றித் தர்க்கிப்பதற்கோ ஒரு துணையும் இப்போது இல்லை. உள்ளுக்குள்ளே ஒரு இடம் காலியாகி மெதுவாக அவனை வேதனைப்படுத்துவதுபோல் அவனுக்குத் தோன்றியது.

சிறு மரத்தின் கிளையொன்றில் சாய்ந்துகொண்டிருந்தவன் தன்னைச் சூழ்ந்துள்ள ஒவ்வொரு பொருளாய்ப் பார்த்தான். மலை, செடி, கொடி, ஆஸ்ரமக் குடிசை, ஆறு, அதற்கப்பாலுள்ள பரந்த வானவெளி எல்லாம் பார்த்தான். ஒன்றிலும் பார்வை ஒட்டவில்லை. அவனுள்ளே காலியாகி இருந்த இடத்தை நிரப்புவதற்கு அவை ஒவ்வொன்றும் முயன்று தோல்வியுற்றன.

கடைசியாகத் தன் அறைக்குத் திரும்பியவன் அப்படித் திரும்பிச் செல்லாமல், முன்போலவே நின்றான். அவன் கண்கள் மட்டும் வேறுபுறம் நோக்கின.

பாமதி அப்போதுதான் மண் குடத்தை எடுத்து இடுப்பில் வைத்துக்கொண்டு, செடிகளுக்கு மத்தியில் ஓடும் பாதை வழியாய் ஆற்றை நோக்கி நடந்தாள். வாசஸ்பதியின் கண்களும் அவள் பின்னாலேயே சென்றன. இன்றுதான் அவளுடைய அழகு முதல் முறையாக அவனுடைய கண்களுக்குத் தெரிந்தது.

சற்று முன்பு சூன்யமாகி இருந்த அவ்விடத்தில்

ஏன் இப்போது இந்த இன்பத் தென்றல் வீசுகிறது? எந்த இடத்தையும் சூன்யமாகப் போகும்படி விட்டு, காற்று பார்த்துக்கொண்டிருப்பதில்லை என்ற இயற்கை யின் நியதிப்படியா?

ஆற்றை நோக்கி நடந்துசெல்லும் அவளுடைய ஆடை அசைவுகளுடன் வாசஸ்பதியின் மனமும் அசைந்தது. அவளுடைய அவிழ்ந்த கூந்தலைப்போலவே அதுவும் அந்த லேசான காற்றில் ஊசலாடி நடுங்கியது. அவள் ஒரு முறை திரும்பமாட்டாளா, கண நேரம் அவள் முக மின்னல் தோன்றி, இன்னும் கொஞ்சமிருக்கும் அந்த சொற்ப இருளையுமோட்டாதா என ஏங்கினன். ஆனல் அவள் திரும்பவில்லை. சென்றுள்; சென்று மறைந்து விட்டாள்.

## 3

இன்பமும் துன்பமும் தோய்ந்த கனவில் ஈடுபட்ட வாசஸ்பதி ஆற்றுப் பக்கம் இருந்து யாரோ கூச்சலிடு வதைக் கேட்டான். யாருக்கோ ஏதோ ஆபத்து வந்து விட்டது போன்ற குரல்; உதவிக்குக் கூவி அழைக்கும் ஓசை; ஓடினன் வேகமாய்.

ஆற்றங்கரையில் நின்ற சிறுவன் ஒருவன் துடித்துக் கொண்டிருந்தான். மட்குடம் மட்டும் அங்கே இருந்தது. பாமதியைக் காணவில்லை.

"ஏன்? என்ன சங்கதி? யாருக்கு என்ன வந்து விட்டது?" என்றுன் வாசஸ்பதி.

சிறுவன் பதில் சொல்லும் முன்பே நிலைமை தெரிந்து விட்டது. பாமதி ஆற்று வெள்ளத்தில் தத்தளித்துக் கொண்டிருந்தாள். நன்றுக நீந்தத் தெரிந்த அவளுக்கு

ஏன் இந்தத் தவிப்பு என்று தெரியவில்லை. ஒரு வேளை அவளுடைய கால்களில் ஆடை சுற்றிக் கொண்டிருக்கலாம் - அதோ தண்ணீருக்குள் மூழ்கிவிட்டாள்...... ...அவள் பார்வை, அந்த முகம், ஏன் அவற்றில் இத்தனை பயங்கரம்? இனி மேலே எழும்பவே மாட்டாளா?

வாசஸ்பதி நீருக்குள் பாய்ந்தான்.

அவளைக் கரைக்குக் கொண்டுவந்து சேர்ப்பதற்குள் அவனுடைய நிலைமை படுமோசமாகி விட்டது. அவளை ஒரு புறம் படுக்க வைத்துவிட்டுத் தானும் அங்கேயே குப்புற விழுந்தான். நாழிகை சென்றுகொண்டிருந்தது. கரையில் நின்ற சிறுவன் ஓடிச் சென்று ஆஸ்ரமத்தில் பார்த்தான். அங்கு முனிவரைக் காணவில்லை. அவரைத் தேடுவதற்காக வேறெங்கெல்லாமோ அலைந்தான்.

பாமதிதான் முதலில் கண் விழித்தாள். விழித்தவாறே சில நிமிடங்கள் உணர்வற்றுக் கிடந்தாள். அப்புறம் ஒவ்வொன்ருக ஞாபகத்திற்கு வந்தன. மெல்லத் திரும்பி தன்னருகே படுத்திருந்த வாசஸ்பதியை நோக்கினுள். அவன் சவம்போல் கட்டையாய்க் கிடந்தான்.

உடலில் நன்ருக உணர்வும் சக்தியும் வந்தவுடன் பாமதி எழுந்து அவனருகே சென்ருள். மெதுவாகப் புரட்டி அவனை வேறு பக்கம் திருப்பினுள். அவன் மார்பிலும் முகத்தருகிலும் கரத்தை வைத்து சுவாசம் வருகிறதா எனப் பார்த்தாள். ஒன்றுமே அவளால் தெரிந்துகொள்ள முடியவில்லை. சிறிது நேரம் எண்ணுத எண்ணமெல்லாம் எண்ணிவிட்டுக் கோவெனக் கதறினுள். கண்ணீர் தாரையாகக் கிளம்பி அவன் முகத்தில் பாய்ந்தது.

எப்படியோ வாசஸ்பதி கண் விழித்தான். சில நிமிடங் களில் பேசவும் செய்தான்.

''பாமதி.''

கண்ணீரைச் சொரிந்த பாமதியின் கண்கள் இதைக் கேட்டுச் சிரித்தன. அவள் பேசவில்லை.

''எனக்காகவா அழுகிறாய்? ஏன்? நான் போனால் என்ன? எனக்காக அழத்தான் ஒருவருமில்லையே!''

''அழ ஒருவருமில்லையா? சாவின் கையிலிருந்தவனைக் காப்பாற்றித்தான் உங்களுக்காக அழ வைத்து விட்டீர்களே''—தேம்பலுடன் இதைக்கூறி முடித்தாள் பாமதி; வாசஸ்பதியின் இதயத்தில் இது மின்னலாய் நெளிந்தது.

''உண்மையாகவா? எனக்காக நீ என்றும் அழ விரும்பு கிறாயா?''-அவள் கரத்தை மெதுவாகப் பற்றித் தன் மார்பில் புதைத்துக்கொண்டான். இருவரும் ஒருவரை யொருவர் பார்த்துக்கொண்டே பொற்சிலைகள் போல் சமைந்திருந்தனர்.

அன்றிலிருந்துதான் அவர்களுக்கு உலகமே புதியதாக இருந்தது.

## 4

அமைதியாக மரணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்த பாமதியின் தந்தைக்கு அதன் வரவு தெரிந்து விட்டது. இருவரையும் அருகில் அழைத்தார்.

''குழந்தைகளே, நானும் என் தர்மபத்தினியும் வாழ்ந்த குடிசை இது. அன்பிற்கும், அறிவுக்கும், தூய்மை இன்பத்திற்கும் இது என்றும் உறைவிடமாயிருந்தது. நீங்கள் இருவரும் கணவனும் மனைவியுமாகி இன்றி

லிருந்து இந்தப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளுங்கள். உங்கள் வாழ்வு உலகிற்கு உபகாரமாய் இருக்கட்டும்.''

இருவர் நயனங்களிலும் நீர் மல்கின.

''குருதேவா......நான் அளிக்கவேண்டிய காணிக்கை? அதை இந்தக் கணத்திலாவது சொல்லி ஏற்றுக்கொள்ள வேண்டும்'' என வேண்டினான் வாசஸ்பதி.

''காணிக்கை! இருவரும் சேர்ந்து பிரம்ம சூத்திரத்திற்கு உரை எழுதுங்கள்.''

சாவின் சன்னிதானத்தில் இருவருடைய திருமணத்தையும் இனிது நிறைவேற்றிவிட்டுப் புன்முறுவலுடன் கண்களை மூடிக்கொண்டார் முனிவர்.

அவர்களுக்கு அப்போது வேறு ஒன்றுமே தோன்றவில்லை; நினைவுக்கும் வரவில்லை; நினைக்கவும் முடியவில்லை. எல்லாம் அவர் கூறிச்சென்ற ஒரே வாக்கியத்தில் சுழன்று கொண்டிருந்தது. உலகின் ஆரம்பமும், முடிவும், அசைவும் அதனுள்ளேதான் இருப்பதாகக் கண்டார்கள்.

பிரம்ம சூத்திரத்திற்கு உரை!
பிரம்ம சூத்திரத்திற்கு உரை!
பிரம்ம சூத்திரத்திற்கு உரை! - என்ன அருமையான, உயர்வான பணி!

மறுநாள் பொழுது விடியுமுன்னே நீராடிவிட்டுப் பூஜை புனஸ்காரங்களுடன் உரை எழுதத் தொடங்கினார்கள். பாமதி விளக்கிக் கூறினாள். வாசஸ்பதி எழுதினான். பாமதி கூறிக்கொண்டே இருந்தாள்; வாசஸ்பதி எழுதிக்கொண்டே இருந்தான்.

சூரியக் கோளமும் உச்சியைத் தாவிப் பிடித்தது.

காய், கிழங்கு, கனி இவற்றை இலையில் வைத்து வாசஸ்பதிக்கு பாமதி பரிமாறினாள். அவன் உண்ட பிறகு தானும் கொஞ்சம் எடுத்துக்கொண்டாள். பிறகு இருவரும் உரை எழுத உட்கார்ந்தார்கள்.

இப்படியே சூரியன் உதிப்பதும் மறைவதுமாக இருந் தான். பகலும் இரவும் மாறி மாறி வந்தன. சந்திரன் பிறப்பதும், வளர்வதும், தேய்வதும், மடிவதுமாக இருந்தான்.

நீண்ட இரவுகளில் பெரும்பகுதி ஆஸ்ரமத்தில், தர்க்கத் திலும், சிந்தனையிலும், எழுத்திலுமே கழிந்தது. அத்துடனே பிரம்ம சூத்திரத்திற்கு உரையும் வளர்ந்து வந்தது.

## 5

வெளி உலகத்தில் வஸந்தன் சஞ்சரிக்க ஆரம்பித்தான். கூரிய கத்தி போன்ற இளந்தளிர்களெல்லாம் காலைக் கதிரின் ஒளிபெற்று மெல்ல அவனை எட்டிப் பார்த்தன. எங்கும் ஒரே புதிய இளமை வெள்ளம் பாய்வது போலிருந்தது. நேற்றுவரை மொட்டையாய் விதவைக் கோலம் பூண்டிருந்த தருக்கள் இன்று பச்சை மேலாடை போர்த்த பருவக் குமரிகளாய் மாறின.

உள்ளே பாமதி கூறினாள்:-

"உலகம் பாலைவனம் போன்றது. தூரத்திலே பச்சை யாய்த் தெரிவதெல்லாம் மன மயக்கம். போகப் போக ஒரே பாழ்வெளிதான். அங்கு தீஞ்சுவை அருவியைக் காணலாமென்று, தள்ளாடித் தத்தளித்து மனிதர்கள் மேலே மேலே செல்கிறார்கள். ஆனால், அந்தோ! அவர்கள் அங்கே காண்பதென்ன? வெறும் கானல் நீர்!

நெருப்புச் சுவாலையின் நீற்றுப்போன புகை! பூதேவி மனம் புழுங்கி வெளியே விடும் பெருமூச்சு!"

வாசஸ்பதி உற்றுக் கேட்டான்; பின்பு அவள் முடிவாகக் கூறிய வார்த்தைகளை எழுதிக் கொண்டான்.

காலம் இவர்களுக்காகக் காத்திருக்கவில்லை. மெதுவாக நழுவிக்கொண்டிருந்தது. அந்த வஸந்தத்தை முழுக்க முழுக்க அநுபவித்துவிட வேண்டுமென்று பக்ஷி ஜாலங்கள் வெளியே ஒரே குதூகலத்தில் இருந்தன. ஆஸ்ரமத்துக் கூரையில் கூண்டு கட்டியிருந்த சிட்டுக் குருவித் தம்பதிகள் தினந்தோறும் ஊடி ஊடிப் பிணங்கி அந்த பிணக்கில் மகிழ்ந்தன. வெளியே தென்றல் மகரந்தத்தைச் சுமந்து பூவுக்குப் பூ தூது சென்று கொண்டிருந்தது. இதையெல்லாம் கவனிக்க அவர்களுக்கு எங்கே நேரம்? இன்னும் பாதி உரைகூட எழுதியாகவில்லையே!

காற்றுக் காலம் வந்து வஸந்தனை வழியனுப்பியது. அதுவும் சென்று கார்காலமும் வந்தது. மின்னலும் இடியும் மழையும் உலகத்தை அதிரவைத்தன. ஆற்று வெள்ளம் கரை புரண்டு, புதிய மணத்தோடு பெருகிற்று. வெளியே ஒரு பிராணியாவது தலை காட்டவில்லை. மனிதர்கள் வீட்டுக்குள் அடைபட்டுக் கிடந்தார்கள். மிருகங்கள் குகையிலும், புதரிலுமாக ஒண்டியிருந்தன. பறவைகள் கூண்டுகளுக்குள் தங்கள் துணையின் உடல் வெதுவெதுப்பால் சொக்கி நின்றன-இங்கே ஆஸ்ரமத்திலோ இவர்கள் எழுதிக்கொண்டிருந்தார்கள்!

உடலின் நிலையாமையைப் பற்றியும் அழகின் அழிவைப் பற்றியும், வாழ்வின் நுயரத்தைப் பற்றியும் எழுத்து ஓடிக் கொண்டிருந்தது. தங்கள் தலைக்கு மேலே சிறகோடு

சிறகாய் அணைத்து நிற்கும் சின்னஞ்சிறு சிட்டுகளைப் பார்க்க இவர்களுக்குக் கண்ணில்லை அப்போது.

இறுதியில் அந்தப் பொல்லாத கோடைக்காலம் வந்தது. மரங்கள் தங்கள் இலைகளை உதிர்த்து மீண்டும் மொட்டையாய் நின்றன. ஆற்று நீர் வறண்டுபோய் எங்கோ ஒரு மூலையில் கொஞ்சமாக ஓடியது. சோர்வும், களைப்பும், வியர்வையும் உலகத்தை ஆட்கொண்டன—சூரியனுக்கு ஏனோ இத்தனை கோபம் இந்தப் பருவத்தில்! எரித்துத் தகித்துவிட்டான் நெருப்பாய்.

பருவங்கள் இப்படியே வந்து வந்து போயின. பூமி தேவியும் சூரியக்காதலனைப் பலவித உருவ எழிலுடன் பல முறைகள் வலம் வந்துவிட்டாள். ஆனால் வாசஸ்பதியும் பாமதியும் எழுதிக்கொண்டே இருந்தார்கள்.

எழுத்துக்கு ஒரு முடிவு இல்லையா?

இதோ முடிந்து விட்டது:

"அவன் அழகன். அவன் அமரன். அவனுக்குப் பிறப்பில்லை; வளர்ப்பில்லை; இறப்பில்லை. அவனைக் காதலிப்பவர்களே மனிதர்கள். அவன் அழகில் மயங்குபவர்களே உண்மையாளர்கள். ஏனெனில் அவன் அழகு அழியாதது. என்றும் இளமை இன்பத்தோடு உள்ளது!"—இப்படிச் சொல்லி முடித்தாள் பாமதி.

உரை பூர்த்தியாகிறது.

வாசஸ்பதி 'அப்பாடா' என்று பெருமூச்சு விட்டான். ஒப்பற்ற ரத்தினத்திற்கு ஒளி கொடுத்தாகி விட்டது; அழகு செய்தாகி விட்டது. இதில் பேருதவி புரிந்த தன் அருமை மனைவியை, அன்புக்காதலியை, இளமை இன்பத் தேனை காதல் பொங்கும் உள்ளத்தோடு

ஏறிட்டுப் பார்த்தான். அவளும் அடங்காப் பிரவாகமான ஆர்வத்தோடு விழுங்கி விடுவதுபோல் பதிலுக்கு நோக்கினாள்.

ஆ!........ அந்த அழகு எங்கே? இளமை எங்கே? மென்மை எங்கே? கம்பீரம் எங்கே? காந்தம் எங்கே? சந்திரமதி வதனத்தில் ஏன் சுருக்கம்? சூரிய சந்திரர்களாய்ச் சுடர் விட்ட விழிகள் ஏன் சோர்வினால் சுருங்கியுள்ளன?

புதுமணக் காதலர்களாய் உரை எழுத உட்கார்ந்தவர்கள், அப்போதுதான் வாழ்வின் கடைசிக் கோட்டில் தாங்கள் நிற்பதைக் கண்டார்கள். ஆனாலும் அவர்களது சிறந்த லக்ஷியம் நிறைவேறி விட்டது. உலகத்திற்கு மகத்தான தொண்டைத் தங்கள் இளமையைப் பலி கொடுத்துச் செய்துவிட்டார்கள். வெற்றிதான். வெற்றியின் பெருமிதமும் தியாகத்தின் நிறமும் அவர்களை உயரே உந்திச் சென்றது. என்றாலும் வெளியே வீசும் காற்றின் கேள்விக்கு அவர்களால் பதில் சொல்ல முடியவில்லை.

காற்று கேட்டது— உங்கள் அழகு எங்கே?

# தீபாவளி வந்தது

" சீதா, உனக்காகத்தான் இந்தக் கல்யாணத்திற்குச் சம்மதிக்கிறேன். ஆம், உ ன க் கா க த் தா ன்! உன் கட்டளையை நான் மீற முடியாது. எனக்கு இதில் கொஞ்சமும் விருப்பமே இல்லை. ஆனால் உன் சொல்லை எதிர்த்து நிற்க என் விருப்பு வெறுப்புகளுக்குப் பலம் ஏது? "

சிவசங்கரன் தம் வீட்டின் ஹாலின் பிரதானமான இடத்தில் மாட்டியிருந்த பெரிய படத்தின் முன்பு நின்று கொண்டு இவ்விதம் தமக்குள் சொல்லிக்கொண்டார். கண்ணீரின் பனித்திரை அவர் கண்களை மூடிக்கொண்டு வந்தது. கைகளைப் பின்புறம் கட்டியபடியே இரண்டடி எடுத்துவைத்து ஜன்னலின் வழியாக வெ ளி யி ல் நோக் ர்.

சிவசங்கரனுக்கு முப்பது வயசுக்குள்தான் இருக்கும். வயசைவிடத் தோற்றத்தில் இன்னும் இளமையாகக் காணப்பட்டார். கண் நிறைந்த அழகு என்று சொல்லு கிறார்களே, அது அவருக்கு முற்றும் பொருந்தும். இந்தச் சில மாதங்களாகத்தான் அவருடைய குறுகுறுத்த முகத்தில் அமைதி நிலவுகிறது. இதற்கு முன்பு அங்கே சதாகாலமும் புன்னகை மலர்ந்துகொண்டிருக்கும்.

படத்தில் இருந்த சீதா உயிர்பெற்ற சித்திரமாக விளங் கினாள். லக்ஷ்மீகரம் அவள் வதனத்தில் சுடர்விட்டது.

சில மாதங்கள் முன்புவரை அந்த வீட்டின் அரசியாக இருந்தவள், இப்போது அதன் தெய்வமாகி விட்டாள்.

சிவசங்கரன் மிகவும் ஏழ்மையான நிலையில் இருந்தவர். சாதாரணக் குமாஸ்தா உத்தியோகத்தில் உழன்றுகொண்டிருந்தார். நாலு வருஷங்களுக்கு முன்புதான் அவர் வாழ்வில் பிரமிக்கத்தக்க மாறுதல் ஏற்பட்டது. அந்த மாறுதலுக்குக் காரணமாயிருந்தவள் சீதா. சீதாவாகவே விரும்பி அவரை மணந்து கொண்டாள். அவளுடைய சொத்து முழுவதும், அவளுடைய சர்வமும் அவருடைய காலடியில் வைத்தாள். அவருக்காகவே வாழ்ந்தாள் கடைசியில் தீராத நோயின் இறுதியில், அவருடைய மடியில் தலை வைத்துக்கொண்டே, "என்னை நேசிப்பதற்கு அடையாளம், உடனே இந்த வீட்டிற்கு மற்றொரு பெண் வந்து என் இடத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும். என்னை ஏமாற்றக்கூடாது. நான் இந்தப் படத்தில் இருந்துகொண்டே உங்களைக் கவனித்து வருவேன்" என்று சொல்லிப் பிரிந்தாள்.

இப்பொழுது அந்த வீட்டிலிருக்கும் அனைத்தும் அவளுடையது. அந்தப் பீரோ, படங்கள், துணிமணிகள், நகைகள், ஏன் அந்த வீடே அவளுடையது. திரும்பிய பக்கமெல்லாம் சிவசங்கரன் அவளையே பார்த்தார். அவள் அந்த வீட்டின், அந்த வீட்டில் இருப்போரின் சொந்தக்காரி. எப்போதும் அவள் அங்கே இருப்பாள்.

அவளுடைய அந்தக் கட்டளையின்படி சிவசங்கரன் சரஸ்வதியை மணந்துகொண்டார்.

பலபேர் பெண் கொடுக்க முன்வந்தார்கள். சரஸ்வதியையும், அவளுடைய பெற்றோரையும் சிவசங்கரனுக்குப்

பிடித்திருந்தது பெண்ணை நேரில் பார்த்தபோது. "இரண்டாந்தாரம்; உனக்கு ஆக்ஷேபம் இல்லையே!" என்றார்.

"எனக்குச் சம்மதம், உங்களுக்குப் பிடித்தால்..." என்றாள் அவள் கனிவோடு.

திருமணம் இனிது முடிந்தது. வீட்டில் திரும்பவும் விளக்கேற்றச் சரஸ்வதி மலர்ந்த முகத்துடன் நுழைந்து விட்டாள்.

இரவு சாப்பாடு ஆயிற்று. பாத்திரம் பண்டங்களை எடுத்து ஒழுங்கு படுத்திக்கொண்டிருந்தாள் சரஸ்வதி. மௌனமாகச் சாப்பிட்டு எழுந்த சிவசங்கரன் துண்டை உதறித் தோளில் போட்டுக்கொண்டு அறைக்குள் சென்றார். தோட்டத்துப் பக்கத்தின் ஜன்னல் நன்றாகத் திறந்திருந்தது. நாற்காலி ஒன்றை இழுத்துப் போட்டுக் கொண்டு அவ்விடத்திலேயே உட்கார்ந்திருந்தார். பார்வை தோட்டத்திற்குள் புகுந்தது. ஆனால் குறிப்பிட்ட ஒன்றிலும் அது படியவில்லை. எங்கோ ஸ்தூல உலகத்திற்குச் சிறிதும் சம்பந்தம் இல்லாத, சென்று போன காட்சிகளை அது காண்பது போல் இருந்தது. ஆழ்ந்த நினைவுக் குவியலில் அவர் புதைந்து போய்விட்டார்.

சரஸ்வதி பரக்கப் பரக்கக் காரியங்களைக் கவனித்தாள். அவசர அவசரமாகச் சாப்பிட்ட இடத்தைச் சுத்தம் செய்தாள். ஓடி ஓடி எடுக்க வேண்டிய சாமானை எடுத்து, வைக்கவேண்டிய இடத்தில் வைத்தாள். பின்பு தட்டில் வெற்றிலை பாக்குப் பழங்களை எடுத்துக்கொண்டு கூஜாவில் பாலுடன் மெதுவாக அறைப் பக்கம் வந்தாள்.

வரும் வழியில் கண்ணாடி முன் ஒரு நிமிஷம் நின்று கலைந்திருந்த தன் கேசத்தை ஒதுக்கி விட்டுக் கொள்ள அவள் மறக்கவில்லை. அந்த நிமிஷ நேரத்தில், அவள் முகம் கண்ணாடியில் தெரிந்தபோது, ஏனோ குப்பென்று நாணத்தால் வேர்த்தது. தனக்குள் சிரித்துக்கொண்டாள்; தனக்குள் வெட்கப்பட்டுக் கொண்டாள்; தனக்குள் தாங்கமுடியாத குதூகலத்தையும் அவள் உணர்ந்தாள்.

அறையில் அவள் நுழைந்தபோது வேண்டுமென்றே சத்தம் செய்யவில்லை. கூஜாவையும் பழத்தட்டையும் கட்டிலின் மீது வைத்தாள். 'என்ன அவ்வளவு யோசனையாம்! ... ஜன்னல் பக்கம் உட்கார்ந்திருக்காரே; நான்தான் அவரை வெகு நாழிகை காத்திருக்க வைத்து விட்டேனோ? இனிமேல் இப்படிச் செய்யக்கூடாது. சீக்கிரம் எல்லா வேலைகளையும் முடித்துவிட்டு வரவேண்டும்' என்று நினைத்துக்கொண்டு சந்தடி செய்யாமல் அவர் பின்னே போய் நின்றாள்.

ஒன்பதேகால் மணிக்கு அங்கு வந்தவள் அப்படியே நின்றாள். ஒவ்வொரு கணத்தையும் விடாமல் எண்ணிக் கொண்டு நின்றாள். சிவசங்கரனும் முன்போலவே உட்கார்ந்திருந்தார். வானத்தில் பிறைச் சந்திரன் கோடிட்டுத் தன்னுடைய இருப்பிடத்தை மட்டும் சொல்லிக் கொண்டிருந்தது.

சரஸ்வதிக்கு இப்படி நின்றுகொண்டிருப்பது வேடிக்கையாகவும் விளையாட்டாகவும் இருந்தது. ஆனந்தம் நெஞ்சின் அடியிலிருந்து பொங்க, வைத்த கண் வாங்காமல் வானத்துப் பிறையையே நோக்கிக்கொண்டிருந்தாள். இன்றைக்குப்போல் இத்தனை அழகான சந்திரனை அவள் பார்த்ததே இல்லை!— 'ஏன், நான் மட்டுமா? அவருந்தான்

பார்த்திருக்க மாட்டார்! என்னுடைய நினைவுகளின் இன்பத்தில் மயங்கி இருக்கும் இவருக்கு நானே அருகில் வரும்போது தெரியவில்லையே. இவருக்கு நான் பெரிதா, என்னைப்பற்றிய நினைவு பெரிதா? இருக்கட்டும் சொல்கிறேன்; நான் மூச்சுக்கூடவிடப்போவதில்லை. எப்போதுதான் திரும்புகிறார் பார்க்கலாம்!' என எண்ணினாள்.

ஒன்பதரை மணியைக் காண்பிப்பதற்காகக் கடிகாரம் ஓசையை எழுப்பியது. அப்போதும் அவர் கலையவில்லை. உண்மையிலேயே இப்போது சரஸ்வதிக்குக் கோபம் வந்து விட்டது. வேண்டுமென்றே ஓர் இருமலை வரவழைத்துக்கொண்டாள்.

"அப்பாடா, கால்மணி நேரமாய் நிற்கிறேன்; திரும்பிக் கூடப் பார்க்க மாட்டீர்களாக்கும்!" என்றாள் அத்துடன் கூட.

சிவசங்கரன் திரும்பினார். திரும்பிச் சரஸ்வதியை நோக்கினார், அந்தப் பார்வை சரஸ்வதியை நோக்கியது போல் இல்லை. யாரோ ஒருத்தியை, முன்பின் தெரியாத ஒரு பெண்பிள்ளையை எதிர்பாராத சந்தர்ப்பத்தில் பார்ப்பது போல் இருந்தது. சரஸ்வதி ஆச்சரியப்பட்டாள்.

"சீதா! .... இல்லை .... இல்லை .... சரஸ்வதி!" என்று தடுமாறினார்.

சரஸ்வதிக்கு நெருப்பை மிதிப்பதுபோல் இருந்தது. அவளுடைய எண்ணங்கள், கற்பனைகள், குதூகலம், ஆச்சரியம், ஆனந்தம் எல்லாம் எங்கோ தலைதெறிக்க ஓட்டமெடுத்தன— என்ன இது சீதாவா!

மெதுவாகக் கரம் பற்றி அழைத்து வந்து கட்டிலில் உட்கார வைத்தாள். அவரைச் சிறு குழந்தையாகப்

பாவித்து அனைத்தும் தானே எடுத்து அவருக்குக் கொடுத்தாள். பின்பு விளக்கை சிறிதுபடுத்திவிட்டு அவர் மடியில் சுருண்டு விழுந்தாள்.

## 3

நாட்கள் ஓடிக்கொண்டிருந்தன; இல்லை, அப்படிச் சொல்வது சரியல்ல; அவை நடந்து கொண்டிருந்தன. தனித்தனியே சிவசங்கரனும் சரஸ்வதியும் அப்படித்தான் நினைத்தார்கள்.

வீட்டிற்கு வேண்டிய சாமான்களைத் தவறாது வாங்கி வந்தார் சிவசங்கரன். சரஸ்வதிக்கு தேவையான பொருள்களும் அவள் கேட்காமலேயே அவளுக்கு வந்து சேர்ந்தன. வெளிப்பார்வைக்கு எல்லாம் சரிவர நடப்பதாகத்தான் தோன்றியது. சிவசங்கரனும் அவ்விதமே நினைத்துக் கொண்டார்.

யந்திரப் போக்கில் குடும்பம் நடந்துகொண்டிருந்தது. அவருடைய கடமைகளை உணர்ந்தவர்போல் அவர் நடந்துகொண்டிருந்தார். சரஸ்வதியும் அவர் போக்கைத் தெரிந்துகொண்டு அவருக்கேற்ற மனைவியானாள். கடமை என்ற மேடு பள்ளம் இல்லாத நேர் பாதையில் சந்தோஷமும் சலிப்புமற்ற வகையில் இவர்களுடைய குடும்பச் சக்கரம் சுழன்றது. அமைதியான வழியில், சரஸ்வதியின் சகிப்புத் தன்மையைச் சோதிக்கத்தக்க வறட்டுத்தனமான அமைதி கொண்ட வழியில், அவர்கள் சென்றார்கள். சண்டை கிடையாது; சச்சரவு கிடையாது; சில்லறை வாக்குவாதங்கள் இல்லை அழுகைதான் இல்லை என்றால் சிரிப்பாவது வேண்டுமே! அதுவும் கிடையாது.

அதன் முடிவு?

சரஸ்வதியின் உள்ளத்தில் கண்ணீர் பிறந்தது. அவளுடைய தனிமையின் ஏக்கத்தில் அது மிகப் பெரிதாக வளர்ந்தது. ஓரிரண்டு மாதங்களில் தன் உள்ளத்தைக் கண்ணீரின் சமுத்திரமாகக் கொண்டாள் சரஸ்வதி. அதில் அலை புரளும்; புயல் வீசும்; பொங்குவதும் வடிவதும் மாறி மாறி நிகழும். சில சமயங்களில் அதன் வீரியம் அதிகமாகிக் கண்களின் வழியே துளி தெறிக்கும்.

சரஸ்வதி மாடி அறையில் நின்று தெருப்பக்கம் பார்த்துக் கொண்டிருந்தாள். அப்போது மாலை நேரம். தெருவின் ஓரங்களில் கணவனும் மனைவியுமாகச் சிலர் பேசிச் சிரித்துக்கொண்டு நடந்தனர். அவர்களின் முகபாவங்களைக் கூர்ந்து கவனிக்க முயன்றாள். அந்தத் தம்பதிகளில், முக்கியமாகப் பெண்களின் முகங்களை மட்டும் தனியான அக்கறையுடன் நோக்கினாள். அவைகளின் மலர்ச்சி, சுருக்கம், அசைவு, அமைதி அத்தனையும் தன் மனசில் பதியவிட்டாள். அந்த மாதிரிச் சலனங்கள் அவளுடைய கல்யாண வாழ்வுக்குப் பின் அவளுக்கு ஏற்பட்டிருக்கின்றனவா? இல்லை; ஏன் இல்லை?

அந்தத் தம்பதிகள் அவசரமாகக் கடற்கரைக்குப் புறப்பட்டிருக்கலாம்; சினிமாப் போகலாம்; கோவில், குளம் அல்லது கடைத்தெரு, எங்காவது செல்லலாம்; மாலை நேரத்தை மகிழ்வோடு கழிக்கக் கிளம்பியிருக்கிறார்கள்.

ஒரு கணம் சரஸ்வதி சிந்தித்தாள்; மாடியில் உள்ள ஜன்னல் வழியாகக் கீழே கவனித்தாள். சிவசங்கரன் சீதாவின் அந்தப் பெரிய படத்தின் முன்பு நின்று பெருமூச்சுவிட்டுக் கொண்டிருந்தார். இது அவளுக்கு

வழக்கமான காட்சி; ஆகையால் இதைக் கண்டு புதிதாக அவள் ஒன்றும் மனம் தளரவில்லை.

தடதடவென்று படியில் இறங்கி வந்து, "இன்றைக்குச் சினிமாப் போகலாமா? உங்களுக்கு வேறு வேலை இல்லையே!" என்றாள் சிரிப்புடன். அந்தச் சிரிப்பும் அவளாக வரவழைத்துக்கொண்ட ஒன்று.

"போகலாம்; ஒரு வேலையும் இல்லை" என்றார்.

ஐந்து நிமிஷங்களுக்குள் தன்னைத் தயார் செய்து கொண்டு தந்தப் பதுமைபோல் அவர் எதிரில் வந்து நின்றாள் சரஸ்வதி. அவள் செய்துகொண்ட அழகு கச்சிதமாக இருந்தது. கண்ணைக் கவரும் இனிய தோற்றத்தைக் கொடுத்தது. இயல்பாகவே நிறைந்திருந்த தன் எழிலுக்குச் சரியான முறையில் அவள் மெருகு கொடுத்திருந்தாள். சிவசங்கரன் அவளை உற்றுப் பார்த்தார். அவர் கண்களில் ஒரு மாறுதலும் தென்படவில்லை. "சரி, புறப்படலாமா?" என்று கலைந்திருந்த கிராப்பைக்கூடக் கண்ணாடி முன் நின்று சரிப்படுத்திக்கொள்ளாமல் கிளம்பினார்.

வழியில் சரஸ்வதி ஓயாமல் பேச்சுக் கொடுத்தாள். அது என்ன, இது என்ன என்று கேட்டுக்கொண்டே வந்தாள். ஒவ்வொன்றுக்கும் சுருக்கமாகப் பதிலளித்து விட்டு வாயை மூடிக்கொண்டார். அவராக நாலு வார்த்தைகூடக் கலகலப்பாகப் பேசவில்லை.

"வண்டி வைத்துக்கொள்ளலாமா?" என்றார்.

"இல்லை; நடந்து வருவதுதான் எனக்குப் பிடித்திருக்கிறது" என்றாள் சரஸ்வதி.

தியேட்டருக்குள் நுழைந்தார்கள்; சினிமா பார்த்தார்கள் இன்பகரமான காட்சிகள் திரையிலே ஓடும்போது, நடிப்புக் காதலர்கள் திரையில் தங்கள் போலி அன்பில் மெய்மறந்திருக்கும்போது, தியேட்டருக்குள் பல உண்மைத் தம்பதிகள் அதை மெய்யாக்க முயன்றுகொண்டிருந்தார்கள்! இருட்டில் பழக்கப்பட்ட கண்களால் சரஸ்வதி தியேட்டருக்குள் சுற்றிலும் நோக்கினாள். திரைக்காட்சி அங்கங்கே உயிர்கொண்டு துடித்தது.

சரஸ்வதியின் கடைக் கண்கள் அவள் கணவன் பக்கம் திரும்பின. அவர் திரையை நோக்கவில்லை. அதில் வெறுப்புற்றவர்போல் தலையைக் கவிழ்த்துக்கொண்டிருந்தார். மௌனமாக வேதனையை அவர் அநுபவிப்பதுபோல் தெரிந்தது.

சரஸ்வதியின் நெஞ்சு வெடித்துவிடும்போல் விம்மியது· அவர் பக்கம் திரும்பி, "போகலாமா?" என்றாள். அவர் நாற்காலியை விட்டு எழுந்தார். "சரி, எனக்கும் பிடிக்கவில்லை!" என்றார்.

சரஸ்வதிக்கு இதைக் கேட்டவுடன் தலை சுற்றியது. நிதானமாக எழுந்து தடுமாறிக்கொண்டே வெளியில் நடந்தாள். அவளுடைய வேண்டுகோளின்படி ஒரு வண்டியை அமர்த்திக்கொண்டு இருவரும் வீடுதிரும்பினர்.

அதன் பிறகு சரஸ்வதியின் விருப்பப்படி சிவசங்கரன் அவளை அடிக்கடி கடற்கரைக்கும் கடைவீதிகளுக்குமாக வெளியில் அழைத்து வந்தார். அவள் விருப்பத்திற்கு அவர் எப்போதும் குறுக்கே நிற்பதில்லை. ஆனால் சரஸ்வதிக்கு இதனாலும் அவரிடமிருந்து அவள் எதிர்பார்த்த இன்பம் கிடைக்கவில்லை. கடற்கரையிலும் மௌனம், காட்சிசாலையிலும் மௌனம். கடை வீதியிலும்

மௌனம்! ஏதாவது கேட்டால் ரத்தினச் சுருக்கமான பதில். இளம் மனைவியுடன் பொழுது போக்கும் துறுதுறுப்பு நிறைந்த வாலிபராக அவர் நடந்துகொள்ளவில்லை. எஜமானியை அவள் இஷ்டப்படி அழைத்துச் சென்று திரும்பிவரும் வேலைக்காரனாகவே மாறிவிட்டார். கடமையில் மட்டிலும் அவர் தவறவில்லை. ஆனால் உயிரற்ற, உணர்ச்சியற்ற, பொலிவில்லாத கடமை!

அவரை வம்புக்கிழுத்துப் பேசும் நிலைக்குக்கொண்டு வந்த போது, அவர் பேசாமலே இருப்பது மிகவும் நல்லது என்று எண்ணும்படியாகி விட்டது சரஸ்வதிக்கு.

"அதோ, அந்தத் தோணியின் நிழலில்தான் நானும் சீதாவும் முன்பெல்லாம் வழக்கமாக உட்காருவது.- இந்த மாதிரி இடங்கள்தான் அவளுக்குப் பிடிக்கும். கடையில் ஒரு கஜம் துணி வாங்குவதற்குள் ஒரு குவியல் துணியைப் பார்வையிட்டு விடுவாள்"—இப்படிச் சீதாவைப் பற்றியே சொல்லிக்கொண்டு வருவார்.

சீதாவின் மேல் சரஸ்வதிக்குப் பொறாமை ஒரு நாளும் கிடையாது. ஆனால், எதிரே உயிர்த்துடிப்புடன் நடமாடும் தன்னை மறந்து இங்கு இல்லாத சீதாவின் நினைவாகவே இருக்கிறாரே, அவரை என்ன செய்வது?

4

என்றும் காணாத உற்சாகத்தோடு அன்று சிவசங்கரன் உள்ளே நுழைந்தார். அவர் கையில் ஒரு புதுப்புடவை இருந்தது. கருநீலப்பட்டுப் புடவை. அதைக்கண்ட சரஸ்வதிக்குக் கொஞ்சம் ஆச்சரியமாக இருந்தது.

"புடவையைப் பார்; எப்படி இருக்கிறது?" என்று அதை அவளிடம் கொடுத்து அபிப்பிராயம் கேட்டது, அவளுக்கு இன்னும் ஆச்சரியத்தை அதிகப்படுத்தியது.

ஆவலுடன் வாங்கிப் பிரித்தாள். மடிப்பைக் கலைத்துத் தன்மீது வைத்து அழகு பார்த்தாள். சந்தோஷம் துள்ளியது அவள் முகத்தில்.

''எங்கே பார்த்து எடுத்தீர்கள்? இத்தனை கச்சிதமாய் என்னால்கூடப் பார்த்துப் பொறுக்க முடியாதே! இதைப் போல ஒன்று எடுக்கவேண்டுமென்றுதான் பல கடைகளில் பார்த்தேன்; கிடைக்கவில்லை'' என்றாள்.

''புடவை உனக்கில்லை'' என்றார் சிவசங்கரன். புடவை அவள் கையிலிருந்து கீழே நழுவும்போல் இருந்தது. சிரமப்பட்டுப் பிடித்துக்கொண்டு, ''பின்னே யாருக்கு?'' என்றாள்.

''சீதாவுக்கு!-அடுத்த வாரம் அவள் திதி வருகிறதா, இல்லையா?- அப்போதே கேட்டாள்; ஒரு கடையிலும் கிடையாது.இதை அவள் உடுத்திக்கொண்டு வந்தால்... அடடா! சாக்ஷாத் லக்ஷ்மிதேவிதான்.''

சரஸ்வதி இந்தத் தாக்குதலுக்குப் பணிந்துவிட விரும்பவில்லை.

''அக்காளா வந்து கட்டிக்கொள்ளப் போகிறார்? நான் தானே? எனக்குத்தான் இந்தப் புடவை!'' என்றாள் வீம்புடன். சின்னஞ்சிறு பிள்ளையின் பிடிவாதமும் ரோஷமும் அவள் முகத்தில் தெறித்தன.

சிவசங்கரன் முதல் முறையாக அன்று ஆத்திரத்திற்கு உட்பட்டார். ''இல்லை; உனக்கு இல்லை! சீதாவுக்குத் தான்!'' என்றார் சற்றுப் பலத்த குரலில்.

''சீதாவே வந்து கட்டிக்கொள்ளட்டும்!'' என்று புடவையை அவ்விடத்திலேயே போட்டுவிட்டு உள்ளே விர்ரென்று நுழைந்தாள் சரஸ்வதி. சிவசங்கரனின்

கரங்கள் அவளை அறையத் துடித்தன. சிரமத்துடன் நிறுத்திக்கொண்டார்.

திடீரென்று பூஜை முடிந்த பிறகு புடவையைச் சரஸ்வதி உடுத்திக்கொண்டு வருவாள் என்று சிவசங்கரன் எதிர் பார்த்தார். புடவை அங்கேயே படத்திற்கு அருகில் கிடந்தது.

"ஏன், உடுத்திக்கொள்ளவில்லையா?" என்றார்.

"இல்லை."

"ஏன்?"

"அது அக்காளுக்கு வாங்கியது; என்னால் உடுத்திக் கொள்ள முடியாது!"

"முடியாதா?"

சரஸ்வதி பதில் அளிக்கவில்லை.

"ஆமாம், நீ உடுத்திக்கொள்ளவேண்டாம். நீ அதைத் தொடக்கூட வேண்டாம். உனக்கு அந்தத் தகுதி கிடையாது. நீ எங்கே, அவள் எங்கே!...ஹும் உன்னைச் சொல்லிக் குற்றமில்லை. அவள் பேச்சைக் கேட்டு, அவள் இருந்த வீட்டிற்கு உன்னைக் கொண்டு வந்தேனே!..." இப்படிப் படபடவென்று பேசிக் கொண்டு போனார்.

"நன்றாய்த்தான் தெரிகிறதே! உங்களுக்காகவா நீங்கள் கல்யாணம் செய்துகொண்டீர்கள்? சீதாவுக்காகத்தானே என்னைக் கொண்டுவந்தீர்கள்?"

"ஆம், அவளுக்காகத்தான்!" என்றார் சிவசங்கரன்.

"அதை நான் உங்களிடம் வந்த அன்றைக்கே தெரிந்து கொண்டேன்; 'என் தலையெழுத்திற்கு நீங்களோ

அவளோ என்ன செய்யமுடியும்?'' என்று தேம்பினாள் சரஸ்வதி. உள்ளத்துக்குள்ளே முன்பு குமுறிக்கொண்டிருந்த சமுத்திரம் இன்று கரையை உடைத்துக் கொண்டது.

அன்று மாலை சரஸ்வதி பிறந்தகத்துக்கு ரெயில் ஏறினாள். ஒருவித உணர்ச்சியும் காண்பிக்காமல் வழி அனுப்ப வந்திருந்தார் சிவசங்கரன். சரஸ்வதி தன் தகப்பனார் வீட்டில் நுழைந்தபோது அவள் தாய்க்கும் தகப்பனாருக்கும் வியப்பாகவும் திகைப்பாகவும் இருந்தது.

''ஏன், அவர் வரவில்லையா?'' என்றார் தகப்பனார்.

''அவருக்கு வேலை; லீவு கிடையாது; ஆகையால் நான் மட்டும் வந்தேன்'' என்றாள் சரஸ்வதி.

வீடு வெறிச்சென்றிருந்தது சிவசங்கரனுக்கு. ஆனால் இப்போது அவருக்குச் சீதாவைப்பற்றி நினைக்க முன்னிலும் அதிகமான நேரம் கிடைத்தது. ஹோட்டலில் சாப்பிட்டுக்கொண்டு வேலை நேரம் போக மீதிப்பொழுதை வீட்டிலேயே கழித்தார். பத்திரிகைகளும் புத்தகங்களும் அவருக்கு உதவி செய்ய முன்வந்தன. இருந்தாலும் அதிகமான ஆச்சரியம் என்னவென்றால் இப்போது அவரால் சீதாவை மட்டும் தனித்து நினைக்க முடியவில்லை. சரஸ்வதியும் கூடவே அவர் ஞாபகத்திற்குக் குறுக்கில் தவறாமல் வந்துகொண்டிருந்தாள்.

சரஸ்வதிதான் எந்த விதத்தில் தாழ்ந்தவள்? சீதாவையும் சரஸ்வதியையும் ஒப்பிடும்போது சரஸ்வதி எந்த வகையிலும் குறைந்தவளாகத் தெரியவில்லையே! குடும்பத்தில்

சரஸ்வதியின் ஒவ்வொரு காரியமும் அவர் மனக்கண் முன் வந்தது. அவளுடன் பொழுதுபோக்காய் வெளியே சென்று வந்ததையும், அப்போது அவள் நடந்துகொண்ட மாதிரியையும் சிந்தித்துப் பார்த்தார். பின்பு ஏன் சரஸ்வதி யுடன் நடத்தும் வாழ்வில் திருப்தி காணவில்லை?

சரஸ்வதியின் தகப்பனார் பெயருக்குப் பொதுவாக க்ஷேம லாபங்களை விசாரித்துக் கடிதம் எழுதினார். அதில் சரஸ்வதியின் சுகமும் தெரிவிக்கச் சொல்லியிருந்தார். அவ்வளவுதான். அவரிடமிருந்தும் அதேமுறையில் பதில் வந்தது. அதில் ஒரு முறை அங்கு வந்துபோகச் சொல்லி மாமா எழுதியிருந்தார்.

சரஸ்வதியிடமிருந்து அவள் பெற்றோர்களால் ஒன்றுமே தெரிந்துகொள்ள முடியவில்லை. பலதடவைகள் லேசாகக் கேட்டுப் பார்த்துவிட்டுச் சும்மா இருந்தார்கள். சரஸ்வதி யின் தாய்க்குத் தன் பெண்ணிடம் சாதாரணமாகவே கொஞ்சம் பயம். அதிகமாகக் கேட்கப்போனால், "உங்கள் வீட்டில் என்னை வைத்திருக்காவிட்டால் இதோ போகிறேன்!" என்று கோபத்துடன் கிளம்பினாலும் கிளம்பி விடுவாள். ஆகையால் தீபாவளிக்கு ஒரு மாதந் தானே இருக்கிறது. அப்போது மாப்பிள்ளை வருவார், எல்லாம் தெரிந்துவிடும் என எண்ணினாள்.

ஆனால் அந்த ஒருமாதத்திற்குள் ஒவ்வொரு நாளும் சரஸ்வதி தேய்ந்துகொண்டே வந்தாள். தன்னுடைய பழைய சிநேகிதிகளுடன் கூட முன்போல் கலகலப்பாகப் பழகுவதில்லை. சாப்பாடும் குறைந்து உடற்கட்டும் குலைந்து வந்தது. யார் என்ன கேட்டாலும், "ஒன்றும் இல்லை" என்று ஒரே பதில் எப்போதும் அவளிடம் தயாராக இருந்தது.

தீபாவளி ஒருவாரம் இருக்கத் திடீரென்று ஒருநாள் சரஸ்வதியின் தகப்பனார் சிவசங்கரன் வீட்டிற்கு வந்தார். அவருடைய உருவத்திலும் கலங்கத்தக்க மாறுதல் இருந்தது.

"தீபாவளிக்கு நீங்கள் அவசியம் வரவேண்டும். இப்போதே ஒருவாரமாவது லீவில் புறப்படுங்கள்" என்றார்.

"வரவேண்டியதுதான். லீவுக்குச் சிரமப்படவேண்டும். எனக்கு என்னவோ இந்தச் சடங்குகள் எல்லாம் அப்படி முக்கியமென்று தோன்றவில்லை. முடிந்தால் வருகிறேன்" என்றார்.

மாமாவின் கண்கள் சிவசங்கரனை உற்றுநோக்கின.

"உங்களுக்குள் இருக்கிற விஷயம் எங்களால் இன்று வரை புரிந்துகொள்ளமுடியவில்லை. சரஸ்வதியின் முகத்தில் விழிக்க உங்களுக்கு ஆசையிருந்தால் உடனே புறப்படுங்கள். ஒரு வாரமாகிறது, சரஸ்வதி படுக்கையில் விழுந்து" என்று சொல்லிவிட்டு அவர் எழுந்தார். எழுந்து போகும்போது தம்முடைய மேல்துண்டால் கண்களை அவர் துடைத்துக்கொண்டு செல்வது சிவசங்கரனுக்கு நன்றாய்த் தெரிந்தது. அப்பாவுக்கு ஒரே பெண் அவள்.

சிவசங்கரனின் உடம்பு பதறியது. குழப்பத்துடன் பத்துநாள் லீவுக்கு ஏற்பாடு செய்துவிட்டு அன்றைக்கே புறப்பட்டார். வழிநெடுகப் பயங்கரமான நினைவுகள், வேதனைதரும் சம்பவங்கள் அவரைச் சூழ்ந்துகொண்டன. மன்னிக்கமுடியாத குற்றவாளியின் நெஞ்சைச் சுமந்து கொண்டு அவர் பிரயாணம் செய்தார் — 'சரஸ்வதி, நீயும்

என்னைக் கைவிட்டு விடாதே! அப்புறம் என்னால் சகிக்கவே முடியாது!'

சரஸ்வதிமட்டும் தனியாக அறையில் படுத்திருந்தாள். மெதுவாக உள்ளே நுழைந்தவர் ஒரு கணம் கதவருகில் நின்று கட்டிலில் அவள் கிடந்த கோலத்தைக் கவனித்தார். சரஸ்வதி இன்னும் அவரைப் பார்க்கவில்லை. கையில் ஏதோ கடிதம் ஒன்றை வைத்துத் தனக்குள் படித்துக் கொண்டிருந்தாள். அவள் கண்களில் அப்போது நீர் மின்னுவதைச் சிவசங்கரன் கண்டுகொண்டார். கட்டிலில் அவருடைய சரஸ்வதியா படுத்திருந்தாள்? இல்லவே இல்லை; அவரால் நம்பவே முடியவில்லை. அப்படித் துரும்பாகிவிட்டாள்.

புருஷனைக் கண்டவுடன் அவள் கரத்திலிருந்த கடிதம் நழுவியது. கண் இமைக்காமல் அவரைத் திரும்பிப் பார்த்தாள். சிவசங்கரன் கட்டிலில் சென்று உட்கார்ந்தார். உச்சி முதல் உள்ளங்கால் வரையில் அவளை அன்போடும் துன்பத்தோடும் நோக்கினார். மெதுவாகத் தம் கரத்தால் அவள் தலைமயிரைக் கோதிவிட்டார். அப்போது அவள் கண்களில் நீர்மணிகள் பெரிதாகிக் கன்னங்களில் வழிந்தன. மெதுவாக அவள் கரத்தைப்பற்றித் தம் இரு கரங்களின் மத்தியிலும் வைத்துக்கொண்டார்.

கீழே கிடந்த கடிதத்தில் அவருடைய பார்வை நிலைத்தது. அது சரஸ்வதியின் கையெழுத்து; அவருக்காக எழுதப்பட்ட கடிதம்.

கடிதத்தை எடுத்து வாசித்தார். ஒரு தடவையல்ல, பல முறைகள் திரும்பத் திரும்ப வாசித்தார். அவர் கண்களிலும் நீர் நிறைந்தது. அவள் ஊரிலிருந்து புறப்பட்

ஞுடன் அவருக்கு எழுதிய கடிதம். ஆனால் இன்றுவரை தபாலில் போடாத ஒன்று.

''ஏன் இதை நீ எனக்கு முன்பே அனுப்பக்கூடாதா?.... நீயுமா இப்படி என்னைச் சோதனை செய்து பார்க்கிறாய்?'' என்றார் தழு தழுக்க.

''உணர்ச்சி வேகத்தில் அப்போது கிறுக்கினேன். அது சரியா இல்லையா என்று தினம் தினம் பார்த்துக் கொண்டே வருகிறேன். இதை அனுப்பி உங்கள் மனசை புண்ணாக்க எனக்குப் பிடிக்கவில்லை'' என்றாள். அதில் அவள் அங்கங்கே எழுதியிருந்த எழுத்துக்கள்.

''எனக்குச் சீதா அக்காளிடம் பக்தியும் அன்பும் உண்டு; குலதெய்வமாகவே அவளை எப்போதும் பாவிக்கிறேன் .... அவளை நினைக்கவேண்டாமென்று நான் உங்களைச் சொல்லவில்லை. ஆனால் உயிருடன் உங்கள் பக்கத்தில் உலவும் என்னை முற்றும் மறக்க வேண்டாமென்றுதான் கேட்டுக்கொள்கிறேன். நீங்கள் வாழ்வில் அலுத்துப்போனதாய்க் கற்பனை செய்துகொள்கிறீர்கள். அப்படிப் போகக் கூடாதென்பதற்காகத்தான் சீதா உங்களை உடனே மணம் செய்துகொண்டு சந்தோஷமாயிருக்கச் சொல்லியிருக்கிறாள். உங்களுடைய இந்த நிலை அவளுக்குக்கூட இப்போது பிடிக்காது.''

''எனக்காக நீங்கள் வாழ்வதாகவோ, சீதாவின் வார்த்தைக்காக வாழ்வதாகவோ தெரிகிறது. இதில் என்ன சுகத்தை உங்களால் காண முடிகிறது? உங்களுக்குச் சுகமளிக்க முடியாமல் நான் இருந்தால் என்னால்தான் உங்களுக்குப் பிரயோசனம் என்ன? எனக்குத்தான் அதில் திருப்தி ஏது? ......எனக்கு வாழ்வு புதியது; அதை நான் என் பழைய கற்பனைகளுடன் பார்க்க விரும்புகிறேன்.

நீங்கள் சீதாவுடன் கடந்துபோன நாட்களில் முழுகிப்போய் என் மன நிலையை அறிய மறந்துவிடுகிறீர்கள். என்னவோ அதிகமாக எழுதியிருக்கிறேன். நான் என்ன செய்தாலும் மன்னித்துவிடுங்கள். உங்களுக்கில்லாத அறிவும் அனுபவமும் எனக்கு இல்லை. உரிமையினால் எழுதுகிறேன்.''

சிறுபிள்ளைபோல் சிவசங்கரன் தேம்பித்தேம்பி அழுதார். சரஸ்வதியின் தலையை மடிமீது எடுத்து வைத்துக்கொண்டு, ''மன்னித்துவிடு, சரஸ்வதி....என்னை மன்னித்துவிடு... நீ சாதாரணமான பெண்ணல்ல...மூடியிருந்த என் கண்களைத் திறந்துவிட்டாய். நீ எழுதியிருப்பது அவ்வளவும் வாஸ்தவம்'' என்றார்.

அன்றிலிருந்து ஒவ்வொரு நாளும் பெரும் பொழுதைச் சரஸ்வதியின் அறையிலேயே சிவசங்கரன் கழித்தார். அவளுக்கு ஆகவேண்டிய முக்கிய உதவிகளை எல்லாம் தம் கையாலேயே கவனித்தார். அறைக்குள்ளே கலகலப்பான பேச்சும் சிரிப்பும் உலவின. ஒவ்வொரு நாளும் சரஸ்வதியின் உடலும் உள்ளமும் உரம் பெற்று வளர்ந்தன. அவள் கன்னங்களில் சிவப்பும், கண்களில் ஒளியும் மின்னின. மறையாத புன்னகைக்கு அவள் இடமானாள்.

தீபாவளி அன்று அவள் புத்துடையுடன் அவரை நமஸ்கரித்து எழுந்தபோது அப்படியே தம் அகன்ற மார்பின்மீது அவளை அணைத்துக்கொண்டார். யுகயுகாந்தரமாய்ப் பிரிந்திருந்த இளம் காதலர்களின் முதற் சந்திப்புப்போல் அவர்களது இருதயப் பறவைகள் ஆனந்த கீதம் பாடிச் சிறகடித்தன.

★

# இன்பத்தீ

**1942**ம் வருஷம் ஆகஸ்ட் மாதம் முதல் தேதி மாலை....

கள்ளிப்பட்டியில் அந்த மாலை நேரம் கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது. வயல் வரப்புகளை உழுது விதை தெளித்துக் கொண்டிருந்தனர் குடியானவர்கள். மண்ணும் தண்ணீரும் கலந்ததால் ஏற்பட்ட ஒருவித மணம், அந்தப் பக்கம் பூரவும் வீசிய மெல்லிய காற்றின் மேல் ஊர்ந்து கொண்டிருந்தது. குடியானவப் பெண்கள் தலையிலும் இடுப்பிலும் மண் குடங்களில் நீரைச் சுமந்துகொண்டு, சின்ன வாய்க்கால்களிலிருந்து ஒயிலாக நடந்து வீடு திரும்பிக்கொண்டிருந்தனர்.

ரங்கசாமியும் முருகையனும் ஆழ்ந்த யோசனையுடன் அந்தப் பக்கம் மாட்டு வண்டிப் பாதையில் நடந்தனர். ரங்கசாமி முருகையனைவிடப் பார்ப்பதற்குக் கவர்ச்சி கரமான தோற்றத்துடன் இருந்தான். பட்டணவாசத்தின் மேல் பூச்சும், கிராமத்து மண்ணின் உரமேறிய உடல் கட்டும் ரங்கசாமிக்கு இருந்தது. எதிரே நடைபாதையில் காணப்பட்ட புழுதி மண்போலவே அவன் நிறமும் சிவப்பும் பழுப்பும் கலந்த மாநிறமாக இருந்தது. காவி நிறக் கதர் ஜிப்பாவும், இடுப்பில் அதே முரட்டுத் துணி யில் வேஷ்டியும் கட்டியிருந்தான்.

முருகையன் அசல் பட்டிக்காடு. அவன் தோற்றம், அவனுடைய கள்ளிப்பட்டியின் செழிப்பை எடுத்துக்

காட்டியது. ரங்கசாமியைவிடப் பல மடங்கு தேக திடமுள்ளவனாக இருந்தான். அவனுடைய நிமிர்ந்த நெஞ்சை மூடிக்கொண்டிருந்த மேல்த்துண்டு அடிக்கடி காற்றில் விலகியது. இடுப்பில் வேஷ்டி; உடம்பில் கதர் ஜிப்பா; மேலே துண்டு; அவ்வளவுதான்.

''எனக்கு ஒண்ணும் புரியமாட்டேங்குது, ரங்கு. இப்ப வெள்ளைக்காரன் நம்பகிட்ட நாட்டை ஒப்படைச்சிடுவானா?'' என்றான் முருகையன்.

''ஊஹூம்! எனக்கு அப்படித் தோணலை! ஒருவாரம் பொறுத்தால் எல்லாந் தெரியும். காந்தி மஹாத்மா என்ன சொல்றாரோ, அதைக்கேட்டு நாமேதான் சுதந்திரத்தை அடையணும்.''

''ஊரெல்லாம் ரொம்பக் கொந்தளிப்பா இருக்கு. ஆனால் எல்லோரும் உன் வார்த்தைக்குத்தான் காத்துக்கிட்டிருக்காங்க'' என்றான் முருகையன்.

''என் வார்த்தை என்ன? எல்லாம் காந்தி வார்த்தைப்படி நடக்கணும்'' என்றான் ரங்கசாமி.

சிறிது நேரப் பேச்சுக்குப் பின் இருவரும் தனித்தனியே பிரிந்தனர். முருகையன் தன்னுடைய நஞ்சைக்காட்டுப் பக்கம் நடந்தான். அங்கே சில தினங்களில் நாற்று நடவுக்கு ஏற்பாடு செய்யவேண்டியிருந்தது. நடப்போகும் நாற்று விளைந்த பிறகுதான், முருகையன் தன் தங்கை அழகம்மாளுக்குக் கல்யாணம் செய்யவேண்டும்.

அழகம்மாள் கொழு கொழுவென்று வளர்ந்து விட்டாள். வயதுக்கு அதிகமான வளர்ச்சி. பெயருக்கு அதிகமான அழகு. அந்த அழகியை முதலில் ரங்கசாமிக்குக் கல்யாணம் செய்துவிட்டுத்தான் பிறகு, தனக்கு

ஒரு பெண் பார்த்துக்கொள்ளவேண்டும் என்றிருந்தான் முருகையன்.

முருகையன், அவன் தங்கை அழகம்மாள், ஒரு கிழவி இந்த மூன்று பேர்கள்தான் அவர்களுடைய வீட்டில். தாயும் தகப்பனும் வெகு நாளைக்கு முன்பே இறந்து விட்டார்கள். தாயைப்பெற்ற பாட்டி தான் இப்போது வீட்டில் இருக்கிறாள்.

தன்னுடைய தங்கை அழகம்மாளைத் தன்னுடைய நண்பன் ரங்கசாமிக்குக் கல்யாணம் செய்துகொடுக்கப் போவதை எண்ணும்போதெல்லாம் முருகையனுக்குத் தாங்கமுடியாத பெருமை ஏற்படும். அந்தக் கிராமப் பக்கத்திலேயே இந்தமாதிரி சரியான ஜோடியை வேறு எங்கு பார்க்க முடியும்? அழகம்மாளுக்கென்றே ரங்க சாமியும், அவனுக்கென்றே இவளும் பிறந்திருப்பது போலல்லவோ இருக்கிறது!

❖

ரங்கசாமி தன்னை மறந்த இன்பத்தில், நாடகக் கொட்டகையில் வேஷம் போட்ட ராஜாக்கள் பூங்காவனத்தில் நடப்பதுபோல், ஒய்யாரமாக அந்த வாய்க்கால் மேட்டில் நடந்துகொண்டிருந்தான். சற்று முன்பு அவனுக்கிருந்த எண்ணம் ஒன்றும் இப்போது அவனிடமில்லை. தேசம், சுதந்திரம், காந்திமகாத்மா, வெள்ளைக்காரன் இதைப்பற்றியெல்லாம் அவன் இப்போது மறந்திருந்தான். அவன் நெஞ்சு, நினைவு, கற்பனை, கனவு எல்லாம் வாய்க்கால் வளைவில் நிற்கும் ஒட்டுமா மரத்தடியில் இருந்தது. பொழுது சாய்ந்த இந்த வேளையில் அவள், முருகையன் தங்கை அழகம்மாள்தான், அங்குவந்து காத்திருப்பாள்!

கருங்கல் பாறையில் அழகு ராணிபோல் அழகம்மாள் கம்பீரமாக உட்கார்ந்துகொண்டு, வாழைத் தண்டுகளை ஒத்த தன் கால்களை வாய்க்கால் நீரில் ஆட்டி விளையாடிக்கொண்டிருப்பாள். மரத்திலிருந்து உதிர்ந்த ஒட்டுமாங் கனிகளைக் கடித்து, ருசிமிகுந்தவற்றை ரங்கசாமிக்காகப் பத்திரமாக எடுத்துவைத்திருப்பாள். நாழிகை ஆகி விட்டதால், இன்னும் காணுமே, இன்னும் காணுமே' என்று அங்குமிங்கும் எழுந்து பார்த்துக்கொண்டு, கோபமும் அன்பும் ஒன்றையொன்று போட்டிபோடும் மனசோடு, தவியாய்த் தவித்துக்கொண்டிருப்பாள். அவன் வந்தவுடன் என்னவிதமாகக் கோபங்கொள்வது, என்ன சொல்லிக் கோபங்கொள்வது என்று கற்பனை செய்துகொண்டிருப்பாள். தெளிந்து ஓடும் பளிங்குத் தண்ணீரிலே தன்னுடைய பிரதிபிம்பத்தை மட்டும் கண்டு, அதற்குப் பக்கத்தில் ரங்கசாமியின் உருவத்தைக் காணுமல் ஏமாற்றமடைவாள்; அதனுல் பெருமூச்சு விடுவாள்!' — இப்படியெல்லாம் நினைத்த வண்ணம் ரங்கசாமி வேகமாக நடக்க ஆரம்பித்தான்.

ஒரு கணம் தண்ணீரில் இறங்கி முகத்தைச் சுத்தமாக அலம்பிக்கொண்டான். அப்போது முகம் துடைப் பதற்காகக் கைக் குட்டையை எடுத்தபோது, அவனுக்கு என்னவோ ஒரு விசித்திரமான ஆசை தோன்றியது. அங்கிருந்தவாறே நிமிர்ந்து பார்த்தான். வாய்க்கால் வளைவு அதிக தூரமில்லை. ஒட்டுமாமரம் நன்ருய்த் தெரிந்தது. மத்தியில் வேறு நீர்த்துறையும் கிடையாது. கரையில் மண்டிக்கிடந்த செவ்வரளிக்கொத்துகளை நிறையப்பறித்து ஒன்ருய்ச் சேர்த்துத் தன் கைக்குட்டையால் இறுகக் கட்டி நீரின் மத்தியில் மிதக்கவிட்டான். ரங்கசாமியின் வரவை அவனுடைய அன்புக் காதலி அழகம்மைக்கு

அந்தப் பூங்கொத்து. வேகமாய் முன்னால் சென்று தூது சொல்லட்டுமே! அவளுடைய பொங்கிவரும் கோபத்தை மாற்றி, அவள் முகத்தில் புன்னகைப் பூவை அரும்பச் செய்யட்டுமே!—திருட்டுத்தனமாய் அந்தப் பூ விடம் அனுதாபம் காட்டும் அந்த மின்வெட்டும் நேரத்தில் அவள் முன்னால் போய் திடீரென்று நின்றால் எப்படி இருக்கும்?

முருகையனிடம் கூட ரங்கசாமிக்குக் கோபம் கோப மாய் வந்தது. நேரங்காலம் தெரியாமல் வெகு நாழிகை களத்து மேட்டில் உட்கார வைத்துப் பேசிக்கொண்டிருந் தானே என்று அவன்மீது குறைப்பட்டுக்கொண்டான். இன்றைக்குச் சரியாக ஒருமணி நேரம்கூட அழகம்மை யுடன் அந்த வாய்க்கால் கரை மரத்தடியில் கழிக்க முடியாது: "பொழுது போய் விட்டது; உங்களுக் கென்ன? இங்கே உட்கார்ந்திருங்கள்; நான் பெண் பிள்ளை! விளக்கு வைக்கிற நேரம் வரையில் உங்களுடன் கொஞ்சிக் கொண்டிருக்க முடியுமா?" என்று படீரென்று மின்னலைப்போல் எழுந்து மறைந்துவிடுவாள்.

ரங்கசாமி எதிரே தெரிந்த மாமரத்தை நோக்கினான். அதன் கிளைகளுக்குள் மஞ்சள் வெயில் கண்ணாமூச்சி விளையாடிக்கொண்டிருந்தது. குலை குலையாய்க் காய்த் திருந்த மாங்கனிகள் தங்கள் ரோஜா நிற வண்ணத்தைக் கதிரவனுக்குக் காட்டிக்கொண்டிருந்தன என்றாலும், அவற்றின் அழகு ரங்கசாமிக்கு அத்தனை ரம்மியமானதாய்த் தோன்றவில்லை. இன்னும் சில வினாடி நேரத்தில் கண் ணெதிரே காட்சி தரப்போகும் அவனுடைய இதயத்து இளவரசி அழகம்மையின் கன்னக் கதுப்புக்கு ஈடாகுமா இந்த மாங்கனிகள்?

இன்பமயமான லோகத்திலே சஞ்சாரம் செய்த ரங்கசாமி திடீரென்று, அந்த லோகத்திலிருந்து தலை குப்புற விழுந்தான். தலையில் அடித்ததுபோல் ஒரு அபயக்குரல் அவன் காதுகளில் விழுந்தது. அபயக்குரல் ஒரு பெண்ணி னுடையது; அதுவும் அவனுடைய உயிரின் உயிரான அழகம்மாளுடையது!

"ஐயையோ!......ஐயோ!......யாருமில்லையா?" என்ற சத்தம்.

அத்துடன் தலைவிரிகோலமாய் அழகம்மா எதிரே ஓடி வந்தாள்.

அவளுக்குப் பின்பு சிவந்த கண்களுடன் ராஜபார்ட் மீசைக்கார ஆசாமி ஒருவன் ஓடி வந்தான்; பசுங்கன்றின் மேல் தாவ'நிற்கும் வேங்கையைப்போல இருந்தது அவன் நிலை. பார்ப்பதற்குப் பயங்கரமாகவும், விகாரமான போக் குடனும் அவன் இருந்தான்.

"அத்தான்... !" என்று அப்படியே ரங்கசாமியின் கால் களில் விழுந்தாள் அழகம்மாள். அவளைத் தூக்கி நிறுத் தினான் ரங்கசாமி. அவனுக்கு ஒரு நொடியில் எல்லாம் விளங்கிவிட்டது. நிதானிக்கப் பொழுதில்லை அவனுக்கு. நிதானிக்கவும் அவன் விரும்பவில்லை. கண் சிமிட்டும் விநாடியில் அந்த மீசைக்கார ஆசாமியைத் தரையில் தள்ளி, அவன் நெஞ்சின் மேல் உட்கார்ந்துகொண்டிருந் தான் ரங்கசாமி. அவனுடைய கைகள் ஓய்வில்லாமல் மற்றவனுடைய முகத்தைப் பதம் பார்த்துக்கொண்டிருந் தன. கடைசியாகக் கை சளைத்தவுடன் எழுந்தான். அவனை உதைத்துப் பக்கத்தில் சலசலத்துக்கொண்டிருந்த வாய்க்கால் தண்ணீரில் தள்ளினான்.

தண்ணீரில் விழுந்த மீசைக்காரனுக்கு எழுந்திருக்கக் கூட சக்தியில்லை; தடுமாறினன். வாயிலும் மூக்கிலும் தண்ணீர் நிறைந்து நிலைமை ஆபத்தாகும்போல் இருந்தது. அவனை மறுபடியும் இழுத்துக் கரையில் ஒதுக்கிவிட்டு, அழகம்மாளிடம் வந்தான் ரங்கசாமி.

அழகம்மாளும் ரங்கசாமியும் மெதுவாக அந்த மரத்தை நாடிப் போகும்போது, "நான் யார் தெரியுமாடா?" என்று உறுமினன் வாய்க்கால் கரையில் கிடந்த முரடன்.

"நீயா? நீ மனிதனில்லை! வெறி நாய்!.......நீ யாராயிருந்தால் எனக்கென்ன?..... இன்னும் ஏதாவது பேசினல், இங்கேயே உனக்குச் சமாதி கட்டி விடுவேன். பார்த்துக் கொள்!" என்றான் ரங்கசாமி.

"அவன் கிடக்கிறன், வாங்க அத்தான்!" என்று சமாதானம் செய்து அழைத்துக்கொண்டு போனுள் அழகி.

"அவன் யாரோ போலீஸ்காரனும். புதுசா வந்திருக்கானும். என்னென்னமோ சொல்லி மிரட்டினன்" என்றாள் அழகி, அந்தக் கல்லில் போய் உட்கார்ந்து கொண்டு.

அப்போது ரங்கசாமியும் அவளுக்குப் பக்கத்தில் அந்தப் பாறையில் உட்கார்ந்திருந்தான். பாறையில் இன்று பெரும்பாகம் தண்ணீருக்குள் மறைந்துவிட்டது. வழக்கம்போல் இன்று அதில் விசாலமான இடம் கிடையாது. தண்ணீர் நிறைய விட்டுவிட்டார்கள் வாய்க்காலில். ஆகையால் ரங்கசாமியும் அழகம்மாளும் ரொம்பவும் நெருக்கமாக இடையில் கொஞ்சமும் இடவெளி இல்லாதபடி உட்காரவேண்டி வந்துவிட்டது இன்றைக்கு!

"இன்னும் கொஞ்சம் தண்ணி வந்தால் நீ எங்கே உட்காருவியாம்?" என்றான் ரங்கசாமி பரிகாசப் பார்வை யுடன்.

"ஓஹோ! ......அப்படி வேறே நினைச்சுக்கிட்டிருக்கிங் களா?" என்று கடைக் கண்ணால் அவன் மடியைப் பார்த்துவிட்டு, "மாட்டவே, மாட்டேன் .! ஓடிப்போய் மாமரத்து வேரில் 'ஜம்'னு உட்கார்ந்துக்குவேன்!" என்றாள் அழகம்மாள் சிரித்துக்கொண்டு.

"எத்தனை நாளைக்கு இப்படி? தை மாசம் வந்தபிறகு என்ன செய்யப் போறே?" என்றான் ரங்கசாமி

"தை மாசம் வந்த பிறகு, இத்தனை தூரம் ஏன் பயந்து ஓடி வரணும்? ஆளில்லாத மூலையாகப் பார்த்து ஏன் இப்படி உட்காரணும்? அசட்டுப்பய ஒருத்தன் ஏன் என்னைத் துரத்தணும்?" என்றாள்.

ரங்கசாமி கல கலவென்று சிரித்தான்.

"நான் ஏன் அவனைப் போய் என் கை வலிக்க அடிக்கணும்?....இதை நீ சொல்லலையே!" என்றான்.

அழகம்மாள் உடனே அவனுடைய வலது கரத்தைப் பற்றி அதை உற்றுப் பார்த்தாள். அவனுடைய உள்ளங் கை நன்றாகச் சிவந்துபோய் இருந்தது. தன்னுடைய மிருதுவான தளிர்க்கரத்தால் அதைத் தடவிக்கொடுத்தாள். ரங்கசாமிக்கு மீண்டும் இந்த உலகத்து நினைவே இல்லை. அவர்கள் இருவரும் மேலே மேலே ஆகாயத்து வான வெளியில் மிதந்துகொண்டிருந்தார்கள். அவர்கள் உட்கார்ந்திருந்த கருங்கல் பாறை, திடீரென்று பஞ்சுப் பொதியலாய் மாறிப் பிறகு மேகமாய் உருவெடுத்து அவர்களைச் சுமந்துகொண்டு வான வீதியில் பவனி

வெகு தூரம் போய்விட்டால்தான், பாதுகாப்பாக இருக்கு மென்று முருகையன் வற்புறுத்தினன். ஆனல் ரங்கசாமி இணங்கவில்லை.

"நான் இப்போது கள்ளிப்பட்டி போகவேண்டும்; போய்ப் பத்திரமாய் அழகம்மாளைக் கூட்டி வருகிறேன். கிழவிக்கு ஒன்றும் ஆபத்து வராது. ஆனல் அழகம்மாள் விஷயம் அப்படியில்லை" என்ருன் ரங்கசாமி.

இதைப் பற்றித்தான் முருகையனும் ஒரு முடிவுக்கு வராமல் இருந்தான். அழகம்மாளை அழைத்துப் பக்கத்து ஊரில் சொந்தக்காரர்கள் வீட்டில் கொஞ்ச நாள் விட்டு விட வேண்டுமென்ற எண்ணம் அவனுக்கும் இருந்தது.

"சரி, நாம் ரெண்டுபேரும் போய்க் கூட்டிவருவோம்" என்று புறப்பட்டான் முருகையன்.

ரங்கசாமி, வழியில் இருக்கும் ஆபத்துக்களைத் தெரிவித்து, தான் மட்டிலும் போய் எப்படியாவது அழைத்து வருவதாகக் கிளம்பினன்.

வாழை மரக் கூட்டங்களுள் பதுங்கி வந்தான். பிறகு வீடு திரும்பும் ஒரு பெரிய ஆட்டு மந்தைக்குள் புகுந்து ஆடுகளோடு ஆடாய் மண்டியிட்டு ஊருக்குள் நுழைந்தான்.

விளக்கு வைத்து ஒரு நாழிகைக்கு மேல் ஆகிவிட்டது. சம்மட்டிபோல் அடித்துக்கொள்ளும் இருதயத்தோடு அழகம்மாள் வீட்டுக் கொல்லைப்புறம் இருந்த வைக்கோல் போர்களுக்கு மத்தியில் வந்து நின்ருன் ரங்கசாமி. காதுகளை கூர்மையாக வைத்துக்கொண்டு வீட்டுக்குள்ளிருந்து வந்த குரல்களை உற்றுக் கேட்டான். அவன் நெஞ்சு திக்கென்று நின்றது. பிறகு வெடித்துவிடும்போல் வலித்தது.

"எங்கே அந்தப் பயல்கள்? உங்க அண்ணன் எங்கே? .. அந்தக் காலிப் பயல் ரங்கன் எங்கே? ரெண்டுபேரும் எங்கே இருக்கான்; சொல்லு?"

"எனக்குத் தெரியாதுங்களே!......அண்ணன் மந்தி யானமே வெளியே போச்சுங்க......ரங்கசாமி அத்தானை அவுங்க வீட்டிலே தான் கேட்கணும். எனக்குத் தெரியாதுங்க."

"உனக்குத் தெரியாதா? ............ கள்ளித்தனமா செய்யிறே; ஏண்டி! மரியாதையாச் சொல்றியா, இல்லே உன்னைச் சொல்ல வைக்கட்டுமா?"— இத்துடன் சுளீர் என்று ஒரு சவுக்குச் சத்தமும், அதைத் தொடர்ந்து 'ஆ' என்ற அழகம்மாளின் வேதனைக் குரலும் கேட்டது.

ரங்கசாமியால் பொறுக்க முடியவில்லை. ஓடிப் போய்த் திறந்து கிடந்த கொல்லைப்புறச் சன்னல் வழியாக உள்ளே பார்த்தான். அங்கு அவன் கண்ட காட்சி கூரிய முள்ளாக அவன் கண்களில் தைத்தது.

'சுளீர், சுளீர், சுளீர்!....'

"ஆ!....ஆ!... ஐயோ!...... எனக்குத் தெரியாதுங் களே!"

அந்தமீசைக்காரப் போலீஸ்காரன், அன்று வாய்க்கால் கரையில் ரங்கசாமியிடம் அடிபட்டவன், சவுக்கைக் கையில் வைத்துக்கொண்டு, மனம்போனபடி அழகம்மா ளின் மீது வீசிக்கொண்டிருந்தான். அவளுடைய பூங்கொடியைப் போன்ற தேகத்தை அந்தச் சவுக்கு தழுவித் தழுவிப் புண் படுத்தியது. அந்த இடத்திலேயே அவனுக்கு உதவியாக ஒரு வடநாட்டு ராணுவ வீரன் நின்றான். தாடியும் மீசையுமாய் இருந்த அவன் கையில்

ஒரு துப்பாக்கியும், இடுப்பில் உறைக்குள் கூரான வாளும் இருந்தன. பசி எடுத்த அவனுடைய கண்கள் அழகம்மாளையே இமைக்காமல் வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தன.

போலீஸ் தன்னுடைய கரத்துக்கு ஓய்வுகொடுத்து, தான் அடிப்பதை நிறுத்தினான். பின்பு தன் செய்கையில் வெறுப்புற்றவன் போல் சவுக்கை ஒரு புறம் வீசிவிட்டு, "நீ கெட்டிக்காரி; ரொம்பக்கெட்டிக்காரி; உன்னைத்தான் எனக்கு முந்தியே தெரியுமே!" என்று பயங்கரமாய்ச் சிரித்தான்.

அவன் சிரிப்பு நெருப்பாக இருந்தது ரெங்கசாமிக்கு.

அவனைக் கொன்றுவிடுவதுபோல் விழித்தாள் அழகம்மாள்.

"நீ சொல்லாட்டிப் போகுது. உன்னை அடிச்சுப் புண்ணியமில்லே! .. இந்தப் பூப்போல மேனியைப் புண்ணாக் கிக்கிட்டியே, பாவம்!" என்று வெடுக்கென அவள் கரத்தைப் பற்றினான். அவள் திமிறினாள். பிடித்த அவனுடைய கையைக் கடிப்பதற்காக முயன்றாள். அவன் விடவில்லை அவளை.

அவன் அவளுடைய கண்களுக்குள் தன்னுடைய சிவந்த விழிகளை ஊடுருவிப் பார்த்தான். பிடித்திருந்த பிடிப்பை இறுகப்படுத்தினான்.

"என்னை நீ ஏமாத்திப் புட்டேல்ல?" என்று வறட்டுத் தனமாய்ச் சிரித்தான். "இப்போ ஏமாத்த முடியாது! உன்னோட அத்தான் இப்போ ஓடியாந்து என்னை எதுவும் செஞ்சிற முடியாது!" என்றான் பல்லை இளித்துக்கொண்டு.

பிறகு வடக்கத்தி பாஷையில் என்னவோ பக்கத்தில் நின்ற ராணுவத்தானிடம் சொன்னான். அவனும்

போலீஸ் பேச்சைக் கேட்டவுடன் கொஞ்சம் சிரித்துக் கொண்டான். "அச்சா!" என்று விகாரமாய்த் தலையை ஆட்டிக்கொண்டே பக்கத்து அறைக்குள் நுழைந்து கதவைச் சாத்திக்கொண்டான்.

அறைக்குள் ராணுவத்தான்.......

வீட்டிற்குள் போலீஸ்காரனின் இரும்புப் பிடியில் அழகம்மாள் .........

வெளியே கொல்லைக் கதவின் ஓரமாய் ரங்கசாமி.......

"இப்ப என்னடீ சொல்றே" என்று வேகமாய் அழகம்மாளைக் கீழே தள்ளினான் போலீஸ் அவளை எழுந்திருக்க அவன் விடவில்லை. அவனுடைய பிசாசுப் பிடியில் தவியாய்த் தவித்தாள் அழகி. பரிதாபமாய் ஓலமிட்டாள்.

சத்தம் செய்யாமல் ரங்கசாமி உள்ளே நுழைந்தான். நல்லவேளை கதவு தாழிடப் படாமல் இருந்தது!

மூச்சுவிடும் ஓசைகூடக் கேட்காதபடி, குதிர்களுக்குப் பின்புறமாகவே நடந்தான். மூலையில் சாய்ந்து கிடந்த இரும்புக் கடப்பாறை அவன் கையில் கிடைத்தது. முதல் வேலையாக வடக்கத்தியான் நுழைந்துகொண்டிருந்த அறையை வெளியே தாழிட்டுவிட்டு, பலங்கொண்ட மட்டும் ஓங்கி இரும்புலக்கையால் மீசைக்காரனைத் தாக்கினான்.

ஒரே அடியில் அவன் தலை சிதறியது. இரத்தத்தில் விழுந்து புரண்டான் வெறியன்.

"அத்தான்?" என்று அலறிக்கொண்டே எழுந்திருக்க முயன்றாள் அழகம்மாள். அவளைத் தூக்கி விடுவதற்காக

குனிந்தவன் நிமிரவில்லை. குனிந்தபடியே குப்புற விழுந்தான்.

அறைச் சன்னல் வழியாக வந்த ஒரு குண்டு அவன் முதுகைத் துளைத்தது. துளைத்துக்கொண்டு நெஞ்சின் வழியாக வந்து விழுந்தது.

அழகம்மாள் வாரிச்சுருட்டிக்கொண்டு எழுந்தாள். பரபரவென்று ரங்கசாமியைக் கீழே விழாதபடி இழுத்துக் கொண்டே வீட்டின் வேறொரு பக்கத்திற்குச் சென்றாள். அங்கே ஒரு சுவற்றில் சாய்ந்தபடியே நிம்மதியாக உட்கார்ந்து, தன் மடியில் ரங்கசாமியைக் கிடத்திக்கொண்டாள். இரத்தம் குபுகுபுவென்று வெளியே பாய்ந்தது. கண்களை மூடி மூடித் திறந்தான் ரங்கசாமி. அவனுடைய பார்வைக்கு அழகம்மாளின் அழகிய முகம் தோன்றித் தோன்றி மறைந்தது. அதன் கண்ணீரால் அவன் நனைந்துகொண்டிருந்தான். அவளுடைய மெதுவான தேக ஸ்பரிசத்தின் இன்பம்கூட அவனுள் எப்படியோ மெதுவாகப் படர்வதுபோல இருந்தது.

அறையில் அடைபட்டுக் கிடந்த வீரன் கண்டபடி யெல்லாம் புரியாத மொழியில் தாறுமாறாக அலறினான். கை சலிக்காமல் சன்னல் வழியாகச் சுட்டுக்கொண்டே இருந்தான்.

டமீல் டமீலென்று குண்டுச் சத்தம் சரமாறியாகக் கிளம்பிய வண்ணம் இருந்தது.

வீட்டிற்குள்ளே சுட்டான். வீட்டுக்கதவில், வீட்டின் மேல் கூரையில், கொல்லைப் புறத்து வைக்கோல் போரில் — இப்படிக் கண்டவிடமெல்லாம் சுட்டுத் தள்ளினான்.

அழகம்மாள் இன்பம், துன்பம், பயம், பச்சாதாபம், இந்த மாதிரி உணர்ச்சிகளெல்லாம் கடந்துவிட்ட ஒரு நிலைக்கு வந்திருந்தாள்; வெளியே வெறிச்சென்று பார்வையை ஒருகணம் ஓடவிட்டாள். அங்கே வைக்கோல் போர் பற்றி எரிந்தது. மேலே தலையைத் தூக்கிப் பார்த்தாள். அங்கே கூரை பற்றிக்கொண்டு எரிந்தது. நாலு பக்கமும் திரும்பினாள். நாலு பக்கமும் நெருப்புப் பற்றிக் கொழுந்துவிட்டெரிந்தது. நெருப்பின் வேகம் அவளைத் தாக்கி அனலை அள்ளி வீசியது. அவள் மெதுவாக எதையோ நினைத்துக் கொண்டவள் போல் புன்னகை பூத்தாள்.

பிறகு ரங்கசாமியை இன்னும் அதிகச் சமீபமாக இழுத்தாள். அவனுக்கும் தனக்கும் மயிரிழை இடம் கூட இடைவெளி இல்லாதபடி அவனைப் பிடித்துத் தூக்கி, அவன் முகத்தை உயர்த்தினாள். அவன் கண்களையே, அவள் அவற்றின் அசைவுகளையே, இமையாத தன் விழிகளால் பார்த்தாள். இரண்டு இதயங்களும் இரண்டு பேர்களது விழிகளும் ஒன்றையொன்று விழுங்கி ஏகத்தில் ஐக்கியமாகின. இருவரும் ஒருவராகி அந்தக் கொடிய நெருப்பின் தங்க ஜ்வாலையின் மத்தியில் அசையாத சோக சித்திரமாக உட்கார்ந்திருந்தார்கள்.

நெருப்பு நகர்ந்துகொண்டே காதலர்களருகில் வந்தது.

நாலு பக்கங்களிலிருந்தும் நெருப்பு வந்தது.

மேலே கூரையிலிருந்தும் தீ மழை பொழிந்தது.

பார்க்குமிடத்திலிருந்தெல்லாம் பரிகொண்ட நெருப்பு தன்னுடைய சிவந்த தீ நாக்குகளை நீட்டியது.

அழகம்மாள் நெருப்பிலிருந்து தன் அன்பனைக் காப்பது போல் அவனை அப்படியே வளைத்து அவன் மீது சுருண்டு

விழுந்தாள். மேலிருந்து விழும் நெருப்புச் சுடர் ஒவ்வொன்றையும் தானே முதலில் ஏற்றுக்கொண்டாள். அவள் அழவில்லை; கதறவில்லை; எழுந்து ஓட முயற்சிக்கவில்லை. தன்னுடைய புடவையைப் பற்றி எரியும் தீக்கொழுந்தை அவள் பார்த்துக்கொண்டுதான் இருந்தாள்; சகித்துக்கொண்டுதான் இருந்தாள். கடைசியாக அவள் விரும்பியபடியே, அவளை விழுங்கிய பின்புதான் நெருப்பு அவளுடைய அன்பனை ருசித்தது.

இவ்விதமாகக் காதலின் இன்பத் தீயால் வாடிய இருவர் தேசத்தின் சுதந்திரத்திற்காக எரிந்த தீயில் ஒரு பிடி சாம்பலாயினர்.

# நான் - அவன் - அவள்

**நான்:**

ராமு எதற்காக டில்லியிலிருந்து இங்கு வந்திருக்கிறான்? ரமணியின் தம்பி கலியாணத்திற்காகவா? புதிராகத்தான் இருக்கிறது. அவனுடைய சொந்தத் தங்கையின் திருமணம் போன வருஷம் நடந்தபோது கூட அவன் வரவில்லை. 'அவனும் வந்திருப்பான், பார்த்து மகிழலாம்' என்று நினைத்துப் போக பல நண்பர்கள் அவன் வராததால் ஏமாந்தோம். 'அதிக வேலை, லீவு கிடையாது' என்று எழுதிவிட்டான். அவன் அம்மாவுக்கு மாத்திரம் இதில் நம்பிக்கையில்லை. 'என்னமோ அவனும் ஒரு பிள்ளை உயிரோடிருக்கிறான் என்ற மட்டில்தான் திருப்தியடைய வேண்டியிருக்கிறது. ஐந்து வருஷத்திற்கு முன்பு வீட்டை விட்டுப் போனவன் இன்னும் இந்தப் பக்கம் திரும்பிப் பார்க்கவில்லை. போன இடத்தில்தான் எங்காவது நிலைத்து இருக்கிறானா? இன்றைக்கு ஒரு ஊர், நாளைக்கு ஒரு ஊர். பணம் மாத்திரம் அடிக்கடி வருகிறது. உங்களைப் போல் ஒரு குடும்பம், பிள்ளைகுட்டி இத்துடன் அவனை நான் என் கண்ணால் பார்க்க முடியாது போல் இருக்கிறது' என்று நாத் தழுதழுக்கக் கூறினாள் அவன் தாய்.

அப்பேர்ப்பட்ட ராமு இன்று வந்திருந்தான். அதுவும் நண்பன் ரமணியின் தம்பி சுந்தரம் கல்யாணத்திற்காக!

எனக்கும் பத்திரிகை வந்திருந்தது. கல்யாணம் ஐந்து மைல் தூரத்தில் உள்ள ஒரு கிராமத்தில். கல்யாணம் அவ்வளவு முக்கியமாக எனக்குத் தோன்றவில்லை. போக வேண்டுமா, வேண்டாமா என்ற பிரச்னையே கிடையாது. பத்திரிகை வந்திருக்கிறதே என்பதற்காக ஒரு கடுதாசி எழுதிப் போடலாம் என்றிருந்தேன். அத்தகைய ஒரு கல்யாணத்திற்காக, எங்களுக்கு சம்பந்தமே இல்லாத ஒரு விசேஷத்திற்காக ராமு டில்லியி லிருந்து வந்திருக்கிறான்! டில்லியில் அவன் விலாசம் தெரிந்து யார்தான் பத்திரிகை அனுப்பினார்களோ! அவனுக்கே ஒரு நிரந்தரமான விலாசம் கிடையாதென்று அவனே சொல்லுகிறானே!

ராமு நேரே என் வீட்டில்தான் வந்து இறங்கினான். வடநாட்டில் கிடைக்கும் சில நூதனப் பொருள்கள் அவன் மூட்டையில் இருந்தன. குழந்தைகளுக்கு அவன் வரவால் பெருத்த யோகம். டெல்லி மாமா கொண்டு வந்த மிட்டாய்களைப் பற்றியும், தின்பண்டங்களைப் பற்றியும் பிரமாதமாய்ச் சொல்லி அந்தத் தெருப் பிள்ளைகளையே பொறுமை கொள்ளச் செய்து விட்டார்கள் ராதாவும் காந்தமும்.

'இந்தக் கலியாணத்திற்கா வந்திருக்கிறாய்?' என்று நான் நம்பிக்கையில்லாமல் கேட்டேன்.

'ஆம், இதற்காகவேதான்........அடுத்தாற்போல் உங்கள் எல்லோரையும் பார்த்துப் போக' என்றான்.

'உன் வீட்டிற்குப் போகவில்லையோ?'

'போனாலும் போவேன், நிச்சயமில்லை' என்றான். இங்கிருந்து சில மைல் தூரத்தில்தான் அவன் ஊரும் இருந்தது.

வந்ததிலிருந்து அவன் நடந்துகொண்ட விதத்தை என்னால் புரிந்துகொள்ளவே முடியவில்லை. ஒரே பரபரப்புடன் நடந்துகொண்டான்.

புறப்பட்டுக்கொண்டிருக்கும் ரெயிலில் ஏறப்போகிறவர்களின் பரபரப்பு அவனிடம் எந்த நேரமும் இருந்தது. பல பல விஷயங்களைப் பற்றிப் பேசினான். தன் அனுபவங்களைச் சொன்னான். ஆனால் அவன் பேச்சு ஒன்றிலும் தொடர்பு இல்லை; கோர்வை கிடையாது. எங்கோ எதையோ வைத்துவிட்டு வந்தவன் போல் துடி துடித்தான்.

'வடநாட்டில் கலவரம் உச்சநிலையில் இருக்கும்போது நான் அதன் மத்தியிலிருந்தேன். என் கண்களால் அந்தக் கோரக் காட்சிகளைக் கண்டேன். காதுகள் அந்த பயங்கரக் கூக்குரல்களைக் கேட்டு மழுங்கி விட்டன. இதில் ஆச்சரியம் என்னவென்றால் சாகப் பயந்தவர்கள் செத்தார்கள்; சாவுக்கு ஒளிந்தவர்கள் மடிந்தார்கள். சாவை ஏளனம் செய்த நான் அந்தப் படுகளத்தின் மத்தியில் வெறுங்கையோடு அலைந்தேன். வேடிக்கை பார்த்தேன். தடுமாறி நின்ற பெண்களையும் குழந்தைகளையும் கூடிய வரையில் தனியிடத்தில் கொண்டுபோய் ஒதுக்கித் தள்ளிப் பாதுகாப்பளித்தேன். ஒவ்வொரு சமயம் குறுக்கே விழுந்து கொலையைத் தடுத்தேன். ஒரு முட்டாளும் என்னை வெட்டித் தள்ளவில்லை. சாவு என்னைக் கண்டு ஒளிந்துகொண்டது. கலவரத்தின் அடையாளம் ஒரே ஒரு வெட்டுக் காயம்...' என்று முழங்கையைக் காண்பித்தான்.

நீண்ட தழும்பு ஒன்று அவனுடைய கதைக்கு சாட்சி சொல்லிற்று. 'பச்சைக் குழந்தையை ஒரு பாவி வெட்டப்

போகையில் நான் அதை பிடுங்கிக்கொண்டு ஓடினேன். அவன் அரிவாளை என் மீது வீசினான். மேலே பாய்ந்த அரிவாளையும் விடாமல் பிடித்துக்கொண்டு குழந்தையையும் அணைத்தவாறு எங்கோ ஓடிச் சென்று மயங்கி விழுந்தேன். பிறகு ஆஸ்பத்திரியில்தான் எனக்கு ஸ்மரணை வந்தது.'

'கையில் இருந்தது என்ன குழந்தை?'

'ஆணோ பெண்ணோ தெரியாது; ஹிந்துவோ முஸ்லீமோ அதுவும் அறியேன்; உலகத்தை அதிசயத்தோடு பார்க்க வந்த ஒரு பச்சை மண்' என்றான்.

என் கண்களில் நீர் தேங்கியது

அப்புறம் கல்யாணப் பத்திரிகை அவனுக்குக் கிடைத்த விபரத்தைக் கேட்டேன். ரமணியின் தம்பி சுந்தரம் டில்லிக்கு எதற்காகவோ அகஸ்மாத்தாய்ப் போயிருந்தவன் ஊர் திரும்புகிற சமயம் அவனை ஜங்ஷனில் சந்தித்தானும். பத்திரிகையை அவசர அவசரமாக எழுதிக்கொடுத்து விட்டு 'கட்டாயம் ஒரு கடுதாசியாவது எழுதுங்கோ. இவ்வளவு தூரத்திலிருந்து நீங்கள் வர்ரதை நான் எதிர் பார்க்க முடியாது' என்றானும்.

'ஏன் எதிர்பார்க்க முடியாது? கட்டாயம் வர்றேனா இல்லையா பார்' என்றானும் ராமு. வண்டி அதற்குள் நகர்ந்து, கல்யாண மாப்பிள்ளை கையை ஆட்ட ஆரம்பித்து விட்டானும்.

இவ்வளவு தூரத்திலிருந்து ராமுவே இந்தக் கல்யாணத்திற்கு வந்திருக்கும்போது நான் மட்டிலும் அவனை அழைப்பிவிட்டுக் [illegible]?

**அவன்:**

நான் கல்யாணத்திற்காக இங்கே வந்திருக்கிறேனும்! நான்தான் ஏதோ சொல்லி வைக்கிறேனென்ருல், இதைக் கேட்பவர்களுக்கு எங்கே புத்தி போய்விட்டது? பொய்யை எவ்வளவு உண்மையாக இவர்கள் நம்பு கிருர்கள்! கல்யாண மாப்பிள்ளை தன்னுடைய புது மணப் பெண்ணையுங்கூட மறந்துவிட்டு என்னை அளவுக்கு அதிக மாக உபசரிக்கத் தொடங்கி விட்டான். 'அன்றைக்கு ஜங்ஷனில் சொன்னதை மெய்ப்பித்து விட்டீர்களே அண்ணு நான் நம்பவே இல்லையே' என்ருன்.

அவன் அண்ணு ரமணிக்கோ தலைகால் புரியவில்லை. 'எங்கே ராமு எங்களை எல்லாம் மறந்து இப்படிப் போய் அஞ்ஞாத வாசம் செய்துவிட்டு வந்தாய்? போனதுதான் போருய் கடுதாசிதான் போட்டாயா? என் தம்பி உன்னைப் பார்த்ததாகச் சொன்னபோது உன்னையே கண்டதுபோல் இருந்தது'. இப்போது நீயே வந்து விட்டாய். இனி ஒரு மாசமாவது இங்கே தங்கித்தான் போகவேண்டும்' என்ருன். இந்த மாதிரி உபசரித்த வர்கள் இன்னும் எத்தனை எத்தனை பேரோ! நான் இவர்களை யெல்லாம் பார்த்துச் சிரித்தேன். பைத்தியக் காரர்கள், இவர்களில் ஒருவரைப் பற்றியாவது எனக்கு நினைவு வருவதில்லையே.

அவள்!...ரமணியின் தங்கை, கல்யாண மாப்பிள்ளையின் தமக்கை பானுமதிக்காகவல்லவோ நான் இங்கே வந்தேன் அவளுடைய நினைவுகள் இந்தச் சில தினங்களில் என்னை வெறியனுக மாற்றியதாலல்லவோ நான் புறப்பட்டேன். டில்லியில், ஜங்ஷனில் நான் அவளுடைய தம்பியையா பார்த்தேன்? இல்லை,

அவனுடைய முகத்தில் அவள் இருந்து பெருமூச்சு விட்டாள். அவன் குரலில் அவள் விம்மினாள். 'கல்யாணத்திற்கு அவசியம் வருகிறீர்களா?' என்று அவனா அழைத்தான்? அவன் அழைப்புக்காக வருபவனா நான்? இல்லை, அவள் அழைத்தாள்; கெஞ்சினாள்; அவளுக்காக வந்தேன். மறுக்கக்கூடாத அவள் உத்தரவுக்குச் சேவகனானேன்.

அவன் தமக்கையைப் பற்றி எத்தனையோ அவனிடம் விசாரிக்க வேண்டுமென்று எனக்குத் துடி துடிப்பு. ஆனால் அதற்கு மேல் அவனுக்கு ரெயில் ஏறுவதில் துடி துடிப்பு! எங்கே விசாரிக்க நேரம்? கையில் திருமணப் பத்திரிகையைத் திணித்துவிட்டு அவன் கிளம்பினான். அந்தப் பத்திரிகை கிடைத்த நிமிஷத்திலிருந்துதான் எனக்குப் பைத்தியமும் தொடங்கியது.

நகரங்களின் சுறு சுறுப்பிலே அவளை மறந்திருந்தேன். வேற்றூர்களை வெறித்துப் பார்ப்பதில் அவள் நினைவை விலக்கியிருந்தேன். பயங்கரமான கொள்ளையும் கொலையும் கண்ட குதூகலத்தில் அவள் மறைந்திருந்தாள்; ஆனால் அவள் மறைந்தே போயிருக்கக் கூடாதா? எல்லாம் பிரமை! என்னை நானே ஏமாற்றிக்கொண்ட பரிதாபகரமான விந்தை. மறந்தோ, மறைந்தோ போகக்கூடியவள் அல்ல அவள்.

அவளைச் சொல்லக் குற்றமில்லை. அட்டைபோல் என்னிடம் ஒட்டிக்கொண்டிருந்தாள். நான் தான் அவளுக்கு சர்வமாகவும் இருக்க முடியும் என்று அவளுக்கு ஒரு நம்பிக்கை. நான்? நானும் என்னவோ எல்லாம் சுலபமாகத்தான் இருக்கும் என்று ஏமாந்தேன். பட்டணத்தில் இருந்த அவள் அத்தை மறுமணம் செய்து

கொண்டவளாம். அதனால் பாறுமதி மருமகளாகி வீட்டுக்கு வந்தால் கிணற்றில் விழுந்து உயிரை விடுவேன் என்றாள் என் தாய். தகப்பனார் துண்டை உதறித் தோளில் போட்டுப் பரதேசம் போய் விடுவாராம்.

தாயார் கிணற்றில் விழவில்லை; தகப்பனார் பரதேசம் போகவில்லை; நான் தான் நாடோடியாய்க் கிளம்பி விட்டேன்; பாறுமதி எவனோ ஒருவனுக்கு மனைவியாகி இருப்பாள்.

கல்யாணப் பத்திரிகையைப் பார்த்ததிலிருந்து எனக்கு உலகமே பாறுமதியாகத்தான் இருந்தது. பாறுமதியின் தம்பி கல்யாணம் இது. பாறுமதி அவசியம் இதற்கு வருவாள். தூரத்தில் இருந்தாவது அவளை ஒருமுறை பார்க்கலாம். அவளுக்குக் குழந்தைகள் இருந்தால் ஆசை தீர எடுத்துக் கொஞ்சலாம். அன்று இருந்த அந்தக் கடல் போன்ற விசாலமான கண்கள், அடர்ந்த வனம் போன்று அவற்றிற்குக் கரை கட்டியிருந்த புருவங்கள், இருளை யொத்த கூந்தல், அரைக் கிழிக்கும் நிலவையொத்த நெற்றி-இவை யெல்லாம் இன்று எப்படி இருக்கின்றன என்று கவனிக்கலாம்.

சே........என்ன வரம்பு மீறிய நினைவுகள்! இன்று அவள் யார்? நான் யார்? அவளிடம் எனக்கு என்ன உரிமை? இது மிகமிகத் தாழ்வானவையல்லவா?

இல்லை; கிடையாது. மற்றொருவனுக்கு அவளிடமுள்ள எந்த உரிமையையும் நான் பறிக்க விரும்பவில்லை. அவளிடம் நான் ஒன்றுமே வேண்டவில்லை. அவள் என்னைப் பார்க்கக்கூட வேண்டாம். அப்படித் தவறுதலாய்ப் பார்த்துவிட்டால், என்னுடைய வெறிப்பான நோக்கைக் கண்டு அவள் முகத்தை வேறு பக்கம்

வேண்டுமானலும் திருப்பிக் கொள்ளட்டும். ஆனல் நான் அவளை ஒரு கணமேனும் பார்த்தாகவேண்டும். இம்முறை பார்க்காவிட்டால் எனக்குப் பைத்தியம் பிடித்துவிடும். உலகம் பரிகசிக்கும் நிலையில் நான் தெருத் தெருவாய் அலைவேன். ஒருவேளை அவளுடைய பெயரைச் சொல்லிக்கொண்டே திரியும்படி இருக்கும். இது அவளுக்கும் கேவலம்; எனக்கும் கொடுமை. இதைத் தவிர்ப்பதற்காக நான் அவளைப் பார்க்க வந்தால் இதைத் தவறென்று கூற உங்களில் யாருக்கும் துணிவுண்டா?

கல்யாண வீட்டில் கண்டவர்கள் எல்லாம் விசாரித்தார்கள். மனசிற்குள் எனக்குக் கோபம் கோபமாக வந்தது. இவர்களுக்குப் பதில் சொல்வதற்குள் எனக்குத் தொண்டை வறண்டுவிடும்போல் இருந்தது. நான் எப்படி எங்கு போய் இருந்தால் இவர்களுக்கென்னவாம்? ஆயிரம் பேருக்கு ஒரேவிதமான பதிலைத் திருப்பித் திருப்பிச் சொல்வதென்றல், அந்தக் கஷ்டம் என்னைப்போல் அனுபவித்தவனுக்குத்தான் தெரியும்.

வழக்கம்போல, இளவேனிற் காலத்துப் பூந் தோட்டத்தில் மயில்கள் கூட்டமாய்த் தோகை விரித்துத் திரிவதை ஒத்து, பெண்கள் கூட்டம் தங்களை நன்ருக அலங்கரித்துக்கொண்டு கல்யாண வீட்டிற்கு வந்திருந்தது. கல்லிழைத்த நகைகளில் ஒளிவீச்சும், அவர்களின் கண் வீச்சும் போட்டியிட்டன. விதம் விதமான துணிமணிகள், மலர்கள், வாசனைத் திரவியங்கள், இத்தனையும் அவர்கள் அழகுக்கு அணிசெய்தன. அந்தக் கூட்டத்தினுள்ளே நான் துருவித் துருவிப் பார்த்தேன். ஒவ்வொரு பெண் ணின் முகமாக, அவள் என்ன நினைத்துக்கொள்வாள்

என்பதையும் சட்டை செய்யாமல், பானுமதியைக் காண வேண்டிப் பார்த்தேன். பானுமதியைப் பார்ப்பதில் சாதாரணமாக அன்று அவ்வளவு சிரமம் இருக்கக் காரணமில்லை. மாப்பிள்ளையின் தமக்கை அவள், அடிக்கடி குறுக்கும் நெடுக்கும் வரவேண்டிய சந்தர்ப்பங்கள் அவளுக்கு அதிகமாக இருக்கவேண்டிய நாள்-ஒரு வேளை என் வரவு தெரிந்துதான் என்னைக் காண விரும்பாமல் எந்த அறைக்குள்ளும் தன்னைப் பத்திரமாகப் புதைத்துக் கொண்டாளோ?

மத்தியான்னம் எல்லோருடனும் உட்கார்ந்து சாப்பிட்டேன். பக்கத்தில் ரமணி இருந்தான். அவனுடைய பேச்சுக்குச் சம்பந்தமில்லாத பதிலைச் சொல்லி விட்டு நினைவிழந்தவனாய் இலையிலிருந்து ஏதோ எடுத்துப் போட்டுக்கொண்டேன். எல்லோரும் எழுந்து விட்டார்கள். 'ஏன் ராமு, இன்னொருதரம் சாப்பாடு போடச் சொல்லட்டுமா?' என்று ரமணி கரத்தைப் பற்றித் தூக்கியபோதுதான் என்னால் எழுந்திருக்க முடிந்தது. பக்கத்தில் கை அலம்புவதற்காக ரமணி செம்பு நிறைய நீர் எடுத்துக் கொடுத்தான். என் நினைவு அங்கிருந்தால் தானே? கரத்தை நீட்டினேன். செம்பு என்கையில் பட்டுக் கீழே பலத்த சத்தத்துடன் விழுந்தது. ஒரே அதிர்ச்சி. 'என்ன அண்ணா!' என்று பக்கத்து அறையிலிருந்து வேகத்துடன் குரல் வந்தது. அதற்குள் ரமணி செம்பை எடுத்து மீண்டும் தண்ணீர் மொண்டு கொண்டிருந்தான். குரல் தலையில் அடித்ததுபோல் எனக்கு ஒலித்தது. அறைப்பக்கம் திரும்பினேன். திறந்த கதவின் பக்கம் பானுமதி நின்று கொண்டிருந்தாள். பானுமதி! நான் வேர்விட்ட மரம்போல் நின்று விட்டேன். ரமணி

யிடம் 'பானுமதியா இவள்?' என்று என் வாய் அலறி விட்டது.

அவள் நின்றாள். நேர்வகிடு எடுத்த தலைமயிர் பின்னல் முடிபோடப்பட்டிருந்தது. கரையில்லாத ஒரு வெள்ளைப் புடவை, வெள்ளை ரவிக்கை. நெற்றியில் விபூதி-இது என்ன சன்யாசினிக் கோலம்? எனக்கு எல்லாம் விளங்கி விட்டது. அவள் கரங்களில் இனி வளை குலுங்காது; அவள் கேசத்தில் இனி மல்லிகை மலராது; அவள் நெற்றியில் இனித் திலகம் மணக்காது.

எப்படியோ அந்தக் கூட்டத்துக்குத் தெரியாமல் கிராமத்துக் குளத்தங்கரை மரத்தடிக்குச் சென்று ஒரு மணி நேரம் பானுமதிக்காக அழுதுவிட்டு வந்தேன் அவள் வாழ்வின் எல்லா சுகமும் அனுபவித்து முடித்து விட்டாள், அந்த வயசிற்குள்.

முகத்தை நீரில் அலம்பிக்கொண்டு கல்யாண வீட்டின் பின்புறமாய் உள்ளே நுழைந்தேன். அங்கே அவள் தனிமையில் நின்றிருந்தாள். போகிற போக்கில் 'உன்னைப் பார்க்கத்தான் வந்தேன்.... ஆனால் இந்தக் கோலத்தில் அல்ல' என்று சொல்லியபடியே நடந்தேன். பின்பு ஏனோ சற்று தயக்கம். நின்றேன். திரும்பவும் அவளிடம் சென்று 'உன்னிடம் ஒன்று கேட்க வேண்டும்; சந்தர்ப்பம் கிடைக்கும்போது தனிமையில் சொல்கிறேன், பதிலளிப்பாயா?' என்றேன்.

அவள் மௌனமாகவே நின்றாள்.

**அவள்:**

ராமு, ஏன் இங்கே வந்ீர்கள்? உங்களை நான் மறந்து- உங்களை மட்டுமல்ல, என்னை, இந்த உலகத்தை, நடந்த

காலத்தை, நடக்கப்போகும் நாட்களை மறந்து-யுக யுகாந் திரங்களாகி விட்டனவே. நான் இப்போது நானே இல்லை உலகத்தில் பாவத்திற்கும் துன்பத்திற்குமே இலக்கான ஒரு பிராணியை வளர்த்து வருவதுபோல் அனுதாபத்துடன் என்னை நான் வளர்த்து வருகிறேன். நான் எதற்காக வளர்கிறேன் தெரியுமா? சாவதற்காக! ஒரே நாளில் என் வயசு பூராவும் ஆகி, நான் மரணத்தை எட்டிப் பார்க்க மாட்டேனா என்ற துடிப்பு எனக்கு. ஆனால் ஒவ்வொரு நிமிஷமும் ஒரு யுக மாகிறதே.

உங்களை இன்று என் இருட்டறையில் சன்னல் கதவு வழியே பார்த்தபோது என் இதயம் நின்று விட்டது. உங்களுடைய ஆவியோ நிழலோ என்ற சந்தேகம். உங்களுடைய நினைவினால் என் கண்களைப் பொய்த் தோற்றம் ஏமாற்றியிருக்க முடியாது. நான் தான் பல காரணங்களால் எப்போதோ உங்களை மறந்துவிட்டேனே.

இதயம் மீண்டும் தன் துடிப்பைத் தொடங்ியது. எனக்குக் கல்யாண வீட்டில் மேளதாளமும் இதர சத்தமும் காதில் விழவில்லை. எல்லாக் காட்சிகளுக்கும் நான் குருடாகி விட்டேன். நீங்கள், நீங்கள் மட்டும்தான் என் கண்ணுக்குத் தெரிந்தீர்கள். அதே சமயம் உங்கள் கண்கள் அந்தக் கூட்டத்தை சல்லடை போட்டு எனக் காகச் சலித்தன. என் பெயரை ரகசிய பாஷையில் சொல்லி அந்தக் கூட்டத்திற்குள் அவை அழைத்தன. நான் அதைத் தெரிந்துகொண்டேன். ஆனால் என் இருப் பிடம் இருட்டறை, எனக்குச் சமீப காலமாக ஆறுதல் அளித்து வருவதும், இனி என்றும் ஆறுதல் அளிக்கப் போவதுமான பூர்க்கிய இடம். என்னுடைய இந்தக்

கோலத்தை நீங்கள் கற்பனையும் செய்திருக்கமாட்டீர்களே? ரமணி அண்ணாவிடம் 'பானுமதியா இவள்?' என்று கேட்ட கேள்வியின் வேகத்திலேயே நான் அதைத் தெரிந்து கொண்டேன். ஆம், பானுமதி தான் நான்.

நீங்கள் 'உனக்காகத்தான் நான் வந்தேன்' என்ற வார்த்தையைச் சொல்லியிருக்க வேண்டாம். எனக்குத் தெரியாதா இது? உங்கள் வார்த்தையின் பயன் இது தான். இதயத்தை இரு கூறாகப் பிய்த்து இரத்தத்தைக் கசியச் செய்கிறது உங்கள் பேச்சு.

பெண்ணும் மாப்பிள்ளையும் நாற்காலியில் உட்கார்ந் திருந்தார்கள். சங்கீதக் கச்சேரி எல்லோரையும் கவர்ந் திருந்தது. அனைவரும் பந்தலில் குழுமியிருந்தனர். ராமு மட்டிலும் மெதுவாக நழுவி வருவதை நான் கவனித் தேன். அவர் எதற்காக வருகிறார் என்பது எனக்குத் தெரியும், நெஞ்சிலே அலைவீச மெதுவாக நடந்து கொல்லைப்புறம் சென்றேன்.

அவர் ஒரே நிதானமாக என் முகத்தை நோக்கினார். 'பானு உன்னை விட்டுப் போன அதே நிலையில்தான் இன்றும் இருக்கிறேன், இன்று என்னுடன் வருகிறாயா? உற்றார் உறவினரின் பேச்சுக்கும் ஏச்சுக்கும் எட்டாத இடத்திற்கு உன்னை அழைத்துச் செல்கிறேன். யோசித்துச் சொல். ஒரு நாளல்ல, ஒரு மாதம், ஒரு வருஷம் உன் முடிவுக்காக இங்கே காத்திருக்கிறேன்,'

கண்கள் நீரைச் சொரிந்தன. 'இல்லை......இல்லை' என்று தடுமாறினேன்.

'என்ன இல்லை... ...'

'நான்.......நான் எங்கும் வரமுடியாது.

'அந்த இருட்டறையும் இந்தக் கோலமும் தான் உன் வாழ்வா?''

'அதைப் பேசிப் பயன் என்ன?'

'பயன் இருக்குமென்றுதான் பேசுகிறேன்.'

'இல்லை, இருக்காது......உங்கள் பானுமதி முன்பே செத்துவிட்டாள்!'

'பானுமதி, உன்னையே ஏமாற்றிக்கொள்ளாதே.'

'இல்லை, என்னை மறந்து விடுங்கள்.'

'மறப்பதற்காகத்தான் வந்தேன்......ஆனால் மறக்கும் நிலையில் நீ இல்லை.

'நான்........! ஊஹூம்......இல்லை!'

தீர்மானமாக அவர் என்னை ஒரு விநாடி உற்றுப்பார்த்தார். நினைக்கும் போதெல்லாம் கண்ணுக்கு முன்னே வந்து நிற்கக்கூடிய பயங்கரமான நோக்கு அது. பின்பு திரும்பிப் பாராமல் வெளியே சென்றார்.

அந்த நிமிஷத்திலிருந்து அவரை எங்கும் காணவில்லை. எல்லோரும் தேடினார்கள். அண்ணா அலைந்தார்; தம்பி விசாரித்தான். அவர் வந்து தங்கிய வீட்டு நண்பர் கேசவன் எங்கெல்லாமோ கேட்டுப் பார்த்தார். அவர் வந்த செய்தி அறிந்து இங்கு வந்த பெற்றோர்கள், அவரைக் காணாதது கண்டு இடிந்துபோய் நின்றார்கள். அவர் சென்று விட்டார். எங்கோ வடக்கு நோக்கி, என்னை மறக்க ஜனத்திரளுக்குள் தன்னைப் புதைத்துக் கொள்ளச் சென்று விட்டார்.

இரவு முழுவதும் அழுதேன். கடைசிச் சொட்டு நீர் வெளியில் கொட்டு மட்டும் அழுதிருப்பேன். முகம்

கனத்துவிட்டது. உடம்பு எங்கும் வலி இப்போது அவரைத் தேடுகிறேன். அவர் எங்கே சென்ருர்? என்னை விட்டு எங்கு சென்ருர்? அவருடன் நான் போக வேண்டும். எங்கெல்லாம் அவர் செல்லுகிருரோ, எந்த மாதிரி வாழ்க்கை நடத்துகிருரோ அதற்கு என்னைத் தயார் செய்து கொள்ளவேண்டும். எங்கு சென்றிருப்பார்? எந்த ஊர், எந்த நாடு, என்ன மொழி பேசும் மக்கள் நிறைந்த இடம்? அவர் மீண்டும் வருவாரா? வந்தால் என் முகத்தில் விழிப்பாரா? 

# கடைசி ஆசை

சந்தனூர் கிராமத்திலிருந்த போர்டு பாடசாலையின் தலைமை ஆசிரியர் மாற்றப்பட்டுப் புதிதாய் நாராயணன் என்பவர் நியமிக்கப்பட்டிருந்தார். இந்த மாற்றல் விஷயத்தில் பரம சந்தோஷம் அடைந்தவர் சங்கரசுப்பு. சுப்பு அங்கே துணை ஆசிரியர். அவருக்கும் மாற்றலாகிப் போனவருக்கும் பிடிக்காது. இப்போது வரப்போகிற நாராயணனே வருமுன்பே சுப்புவின் உதவியை நாடியிருந்தார். அல்லாமலும் அவரைப் பற்றித் தாம் ஏற்கனவே கேள்விப்பட்டிருப்பதையும் எழுதி, அவர் குணத்தை வெகுவாகப் பாராட்டியிருந்தார். உண்மையில் சுப்பு அதற்கு உரியவர்தான்.

"என் மனைவிக்குப் பிரசவகாலம். நான் தனியாக வந்து சில மாதங்கள் இருக்கவேண்டும். தயவுசெய்து எங்காவது சாப்பாட்டிற்கு வசதி செய்தால் நலம். எனக்கு வேறு ஆளும் கிடையாது. சமையலுக்குப் பையன் கிடைத்தால் ரொம்பவும் நல்லது" என்று எழுதியிருந்தார் நாராயணன்.

சுப்பு அதைப்பற்றிக் கொஞ்சமும் கவலைப்படவில்லை. "வருகிறவர் ரொம்ப இளசு போலிருக்கு. இந்தப் பட்டிக் காட்டில் பையனாவது, சாப்பாடாவது! நம்ம வீட்டில் சமைக்கிறதைப் பையனிடம் கொடுத்தனுப்பினால் சாப்பிடுகிறார்" என்று தீர்மானம் செய்து, அப்படியே ஏற்பாடும் செய்துவிட்டார்.

தலைமை ஆசிரியர் நாராயணன் சுப்பு நினைத்ததுபோல் மிகவும் இளைஞர். முப்பது வயதுகூட இருக்காது. வேறு வழியில்லாமல் சுப்புவின் உதவியை நன்றியோடு ஏற்றுக் கொண்டார்.

சுப்புவுக்கு வயது ஐம்பதுக்குமேல் இருக்கும். மனைவி இறந்து பல ஆண்டுகள் ஆகிவிட்டன. அவருடைய தமக்கை, பெண் ஐயா, பையன் பசுபதி இவர்கள் தாம் குடும்பத்து நபர்கள். மூத்த பெண்ணை அடுத்த ஊரில் திருமணம் செய்துகொடுத்திருந்தார். ஐயா எப்போதும் இங்குதான் அவருடன் இருக்கிறாள். அவருடைய தமக்கை அதிகமாக எழுந்து வேலைவெட்டி செய்ய முடியாத ஒரு கிழம். பையன் பசுபதி அவர் பள்ளிக் கூடத்திலேயே படித்துவந்தான். தலைமை உபாத்தியாயர் நாராயணனுடைய வகுப்பு அவன்.

## 2

கிராமத்திலே புதிதாக வந்த நாராயணனுக்கு அதிக மாகப் பொழுதைப் போக்குவதற்கு வழி இல்லை. ஒரு நாள் மாலை கையில் ஒரு நாவலை எடுத்துக்கொண்டு ஊருக்கு வெளியே புறப்பட்டார். வாய்க்காலைத் தாண்டி இருக்கும் பொட்டலில் உட்கார்ந்து படிக்கலாம் என்ற எண்ணம்.

போகும் பாதையில் ஒரு புறம் வரிசையாக மருதாணிப் புதர்; அது குப்பென்று பூத்து இனிமையான மணம் வீசிக்கொண்டிருந்தது. மறுபக்கம் கற்றாழை. இரண்டு புதர்களுக்கும் மத்தியில் இருந்த ஒற்றையடிப் பாதையில் ஆசிரியர் போய்க்கொண்டிருந்தார். சற்று நேரத்தில் எதிரேயிருந்து கிராமத்துப் பெண்கள் கூட்டம் வாய்க் காலில் நீர் சுமந்து திரும்பிக் கொண்டிருந்தது. கலகலப்

பாகப் பேசிக்கொண்டும் சிரிப்பைச் சிதறிக்கொண்டும், வழியெல்லாம் வம்பளந்து சென்றுர்கள் அவர்கள். ஒதுங்கி நின்று அவர்களுக்கு நாராயணன் வழிவிட்டார். மற்ற பெண்கள் அனைவரும் சென்ற பிறகு, தனியே ஒருத்தி மட்டும் அவர்களுடன் கலந்து கொள்ளாமல் பின்னுல் வந்துகொண்டிருந்தாள். தற்செயலாக நாராயணனின் பார்வை அவள்மேல் விழுந்தது. அவளும் பார்த்தாள். "ஆ! அந்த முகம்......"

மறுமுறையும் நாராயணனுக்கு அந்த முகத்தைப் பார்க்க வேண்டும்போல் இருந்தது. மறுமுறையும் அவள் பார்த்தாள். இளமை பொங்கி மினுமினுக்கும் பொன்முகம், சுருண்டு நெளி நெளியாகக் காற்றில் விளையாடும் கருங் கூந்தல்; அகன்று நீண்ட பெருங் கண்களில் மிரண்டு ஒளியும் வண்ண விழிகள் .......ஆனுல் அந்தச் சுந்தர நிலவு முகத்தை ஒரு சோகத் திரை மூடியிருந்தது. அந்தத் திரையின் பின்னிருந்த அந்த வதனத்திற்குத்தான் என்ன கவர்ச்சி!

நாராயணனுக்கு நாவல் ருசிக்கவில்லை. அவர் அந்தப் பெண்ணின் முகத்தை மூடியிருந்த பயங்கரப் புகை மண்டலத்தைப் பற்றியே சிந்தனை செய்துகொண்டிருந் தார். அவளுக்கு வாளிப்பான தேகம் இருந்தது; காந்தம் போன்ற கண்களும், ரோஜாவை ஒத்த அதரங்களும் இருந்தன. அவள் அன்று காலை மலர்ந்த புதுமலரைப் போல அழகாகவும், இனிமையாகவும், புதுமையாகவும் இருந்தாள். ஆனுல் அவள் யாருக்காக அப்படி இருந் தாள்?—அவளுக்காகவும் இல்லை; வேறு யாருக்காகவும் இல்லை. அப்படி யென்றுல் இயற்கை ஏன் அவளுக்கு இவ்வளவு அரிய செல்வங்களை வாரி வழங்கியிருக்கிறது?

ஒருமுறை பார்த்தால் மறக்க முடியாத மிகச் சில முகங்களில் ஒன்று அவளுடைய முகம்.

மறுநாள் மாலை வழக்கம்போல் வாய்க்கால் பக்கம் போனபோது மற்ற பெண்கள் காணப்படவில்லை. அவள் மட்டிலும் கூட ஒரு பையனுடன் வந்து கொண்டிருந்தாள். பையன் வேறு யாருமில்லை, சுப்புவின் பிள்ளை பசுபதி! உபாத்தியாயரைத் தாண்டிச் செல்லும்போது "இவர்தான் அக்கா நம்ம சார்; தினம் நான் சாதம் கொண்டுபோய்க் கொடுக்கிறேனே அவர்" என்றான். இருவர் காதிலும் இது விழுந்தது. இருவரும் பார்த்தார்கள். அந்தப் பெண்ணின் முகம் முன்னிலும் அதிக மான சோகத்தைப் பிரதி பலித்தது.

## 3

சுப்பு ஒரு நாள் நாராயணனிடம் கூறினார்: "நம்ம ஜயா கதையை ஏன் கேட்கிறீங்க? நீங்கதான் பத்திரிகை யிலே பார்த்திருப்பீங்களே! எல்லாப் பத்திரிகையிலேயும் போட்டானே! கல்யாணம் ஆன அதே நாள் மாப்பிள்ளை செத்துப்போயிட்டான் ஸார்" என்றார் எவ்வித உணர்ச்சியு மின்றி; அவருக்கு இதைச் சொல்லிச் சொல்லி மரத்து விட்டது. இப்போது மிஞ்சியிருப்பது பத்திரிகையில் வந்த பெருமைதான்.

நாராயணன் தனக்குள் பொங்கினார். பல நாட்கள் ஜயாவைக் காணும் சந்தர்ப்பம் வந்தபோதும், அதைத் தடுக்க விரும்பினார். முடியவில்லை. அவர் விருப்பத்திற்கு அவ்வளவு வலிமை கிடையாது.

ஒருநாள் சுப்புவின் பையன் பசுபதியும் நாராயணனும் விளையாட்டாகப் பேசிக்கொண்டிருக்கும்போது

"உங்களுக்கு எந்தக் காய்கறி அதிகம் பிடிக்கும் ஸார்?" என்றான் பசுபதி.

"கத்தரிப்பிஞ்சு, வெண்டிக்காய், முருங்கை........" இப்படிச் சொல்லிக்கொண்டேபோன நாராயணன் ஏதோ நினைவுக்கு வந்தவர்போல் சட்டென்று பேச்சை நிறுத்தி, ஏன் இதைக் கேட்கிறாய்?" என்றார்.

"ஒன்றுமில்லை ஸார்" என்று சிரித்தான் பையன்.

"இல்லை சொல்" என்று பிடிவாதம் பிடித்த பிறகு "ஜயா அக்கா கேட்கச் சொன்னா, ஸார்" என்றான்.

நாராயணனுக்கு இதைக் கேட்டவுடன் இதயமே எங்கோ நழுவி விட்டது போலிருந்தது. ஆனால் அதே இதயம் மறுநாள் சாப்பாட்டில் ஒரே கத்தரிப்பிஞ்சும் வெண்டைக்காயுமாய்க் கலந்திருப்பதைக் கண்டு மகிழ்வடைவதா, துக்கப்படுவதா என்று தெரியாமல் தவித்தது.

திடீரெனச் சுப்பு உடல் நலமில்லாமல் படுத்துவிட்டார். அவர் தமக்கையும் பையனும் ஊரில் இல்லை. பள்ளிப் பையன் வேறொருவன் மூலம் சாப்பாடு வந்துகொண்டிருந்தது.

நாராயணன் சுப்புவைக் கவனித்து வருவதற்காக முதல் முறையாக அவர் வீட்டிற்குப் புறப்பட்டார். அப்போது கட்டிலில் படுத்திருந்த சுப்புவுக்குப் பக்கத்தில் ஜயா உட்கார்ந்திருந்தாள். பக்கத்தில் அரிசிக் கஞ்சி சூடாக இருந்தது.

நாராயணனைப் பார்த்த ஜயா அவசரமாக எழுந்து உள்ளே ஓடினாள். சுப்புவும் கட்டிலில் இருந்து எழுந்திருக்க முயன்றார். அவரைக் கையமர்த்திவிட்டுத் தாமே

எடுத்துக் கஞ்சியைக் கொடுத்தார் நாராயணன். சுப்புவும் அவர் கொடுக்கிறாரே என்ற காரணத்தால் பிடிவாத மில்லாமல் நிறையச் சாப்பிட்டார். இதைச் சன்னலின் பக்கத்தில் நின்று கண்ணிமைக்காமல் பார்த்துக்கொண்டு நின்றாள் ஜயா. நாராயணன் சுப்புவின் நெற்றியைத் தொட்டுப் பார்த்தார்; ஏற்கனவே தாம் சொல்லியிருந்த வைத்தியரை அனுப்புவதாகக் கூறினார்; விரைவில் குணமடையும் என்றும் ஆறுதல் தெரிவித்தார்.

"இங்கேயே சாப்பிட்டு விடுங்களேன்" என்றார் சுப்பு.

"இல்லை, எடுத்துக்கொண்டு செல்கிறேன்" என மறுத்தார் நாராயணன்.

சுப்புவின் வேண்டுகோளைக் கேட்டு மலர்ந்த ஜயாவின் முகம் நாராயணனின் பதிலால் வாடியது. இதைக் கண்ட நாராயணன் தமக்குள் பெருமூச்செறிந்தார்.

"கவனமாகப் பார்த்துக் கொள்ளுங்கள்" என்று அவர் ஜயாவிடம் சொல்லும்போது ஜயா அவரையே பதுமை போல் நோக்கிக் கொண்டிருந்தாள்.

## 4

கிராமத்துக் காற்றில் பொய்யான கதை உலவியது. ஜயாவின் காதுக்கும் நாராயணனின் செவிக்கும் எட்டும்படி பலர் பேசிக்கொண்டார்கள். தினம் அவள் கடிதம் எழுதிக்கொடுத்தாளாம்; அவர் பதில் அனுப்பினா ராம்! விரைவில் பகிரங்கமாக அவருடன் அவள் இருக்கப் போகிறாளாம்! இப்பொழுதிருந்தே எந்த விதத்தில் சுப்புவை ஒதுக்கி வைப்பது என்பது பற்றித் திட்டங்கள் திண்ணைக் கச்சேரிகளில் உருவாயின.

தனிமையிலே ஜயா கண்ணீர் வடித்தாள்.

தனிமையிலே நாராயணன் பெருமூச்செறிந்தார்.

தாயார் வீட்டிலிருந்த நாராயணனின் மனைவி அடிக்கடி அன்புக் கடிதங்கள் அவருக்கு எழுதிக்கொண்டிருந்தாள். கடைசியாக ஒருவருக்கும் தெரியாமல் மேல் அதிகாரிகளுக்கு மனு எழுதிப்போட்டு நாராயணன் தன் மாறுதல் உத்தரவைப் பெற்றார். வேற்றூருக்கு மாற்றிக்கொள்ளத் தீவிர முயற்சியெடுத்து வெற்றியும் பெற்று விட்டார். காரணம்? இரண்டுங்கெட்டானாய் ஊசலாடிய அவர் நெஞ்சு; அதை அப்படி ஆட்டிவைத்த அபலை ஜயா.

திடீர் மாறுதலைக் கேட்ட சுப்பு அயர்ந்துவிட்டார். ஜயாவின் மூச்சு கேட்ட அளவில் நின்றுபோய், மீண்டும் வந்தது.

மாலை சுப்புவின் வீட்டிற்கு வந்து "நான் இரவு நாலு மணி வண்டிக்குப் புறப்படுகிறேன்; உங்கள் அன்பை என்றும் மறக்க முடியாது" என நாத் தழுதழுக்கக் கூறினார் நாராயணன். அவர் கண்கள் ஜயாவிடம் விடை பெற்றுக்கொள்ள முயன்றபோது ஜயாவின் கண்கள் நீருக்குப் பின் மறைந்திருந்தன.

இரவு பன்னிரண்டு மணி...........

பெட்டி படுக்கை எல்லாம் எடுத்து வைத்து ஆயத்தமாய்த் தம் அறையில் உட்கார்ந்திருந்தார் நாராயணன்.

அவருக்குத் தூக்கம் வரவில்லை; தூங்கவும் விரும்பவில்லை.

அந்த கிராமத்தில் நடந்த சம்பவங்களை ஒவ்வொன்றாக எண்ணிப் பார்த்துக்கொண்டே விழித்திருந்தார். பத்துமணி வரையில் அங்கு தங்கிப் பேசிக்கொண்டிருந்துவிட்டு, சுப்பு பிரியா மனத்துடன் விடை பெற்றுக்கொண்டார்.

—அன்று இரவுக் கடைசிச் சாப்பாட்டில் என்ன தெரியுமா? கத்தரிப்பிஞ்சு, வெண்டைக்காய், முருங்கை....

சும்மா சாத்தியிருந்த கதவு திறந்தது. கண்களைக் கூர்மையாக்கி நோக்கினார் நாராயணன். அங்கே ஜயா நின்றுகொண்டிருந்தாள். நன்றாகப் பார்த்தார். அவர் நினைவின் மாயா உருவத் தோற்றமல்ல அது. உயிரும் உடலும், நெஞ்சும் நினைவும் சேர்ந்து துடிக்கும் இளம் பெண் ஜயா அவள்!

''ஜயா!''

அவள் உள்ளே வந்தாள்.

''இங்கு எங்கே வந்தாய், இந்த நேரத்தில்?''

அவள் பேசவில்லை. அவள் இதழ்கள் துடித்தன.

நாராயணன் தவித்தார்; கலங்கினார்; மகிழ்ந்தார்; துடித்தார்; தமக்குள் அழுதார்.

''ஜயா, போய்விடு!''

ஜயா கீழே விழுந்தாள் அவர் காலடியில். தீனமாக அவரைப் பார்த்தாள். ''நான் போக முடியாது'' என்று தீர்மானமாகக் கூறின அவள் கண்கள்.

''நான் கல்யாணமானவன்; குழந்தை உள்ளவன். உன்னை அழைத்துக்கொள்ள........''

ஜயா வாய் திறந்தாள்.

''நான் அழைத்துக்கொள்ளச் சொல்லவில்லை.......''

ஒரு கேள்விக்குறி நெற்றியில் வளைய அவளை நோக்கினார். வெறுப்பு, விருப்பு, அனுதாபம், தாபம் இத்தனையும் அந்த அறையில் வட்டமிட்டன. மங்கலான விளக்கு வெளிச்சத்தில் பூரணப் பொலிவுடன் ஒரு

பூரணமான பெண் அங்கு அவர் காலடியில் உட்கார்ந்திருந்தாள்.

காற்று வெளியே வேகமாக வீசியது. ஆந்தைக் குரல் ஜோடியாய் ஒலித்தது. இயற்கை, மனிதன் தனக்குள் ஏற்படுத்திக்கொண்டுள்ள பலவிதச் சம்பிரதாயங்களையும் சட்டதிட்டங்களையும் வென்று தன் ஆட்சியை அங்கே நிலைநாட்டியது.—அறைக்குள் இருள்......

ஜயாவை வெளியே அனுப்பும்போது தன் கரத்தால் அவள் கண்களைத் துடைத்தார் நாராயணன்.



வேற்றூரில் வேலை ஒப்புக்கொண்ட தினம் நாராயணனுக்கு ஒரு கடிதம் வந்தது. அதில் ஜயா எழுதியிருந்தாள்:

"நான் வாழ்ந்தால், அது சாவைவிட மோசமானது. ஆகையால் வாழ்வை முடித்துக்கொண்டேன். அந்த முடிவுக்கு வந்த பின்னர்தான் தங்களைச் சந்தித்தேன். அந்த இன்ப நினைவுடன் இறக்கச் செய்யும் தங்களுக்கு நன்றி." 

# ஆண் - பெண்

## பிறப்பு

அது ஒரு இரண்டுங் கெட்டான் ஊர். அதாவது அதைக் கிராமத்திலும் சேர்க்க முடியாது; நகரத்திலும் சேர்க்க முடியாது. பட்டணக்கரைப் பேர்வழிகள் அதைப் பட்டிக்காடு என்பார்கள். பட்டிக்காட்டு ஆசாமிகள் அதைப் பட்டண வரிசையில் சேர்ப்பார்கள். அந்த ஊருக்குப் பட்டிக்காட்டின் வசதிகளும் பட்டணத்தின் மேல் மினுக்கும் உண்டு.—ஊரைச் சொல்லிவிட்டேன். அந்த ஊரின் பெயரைப் பற்றிய கவலை நமக்கெதற்கு?

அந்த ஊரில் ஒரு தெருவில் எதிரெதிரே இரண்டு வீடுகள். ஒன்று மாடி வீடு. [சம்பிரதாயப்படி மாடி வீட்டைத்தான் முதலில் சொல்லவேண்டும்!] இன்னொன்று கூரை வீடு. இந்த இரண்டு வீடுகளின் வாசற்படிகளும் சொல்லி வைத்தாற்போல் நேர் எதிரே இருந்தன. அதே மாதிரி கொல்லைப்புறத்தின் கதவுகளும் கோடு போட்டாற்போல், வாசற் கதவுகளின் நேர் பின் புறம் இருந்தன.

இந்த இரண்டு வீட்டின் பெண் பிள்ளைகளும் சேர்ந்தாற் போல் கருவுற்றிருந்தார்கள். இப்போது பத்தாவது மாதம். சேர்ந்தாற்போல் இடுப்பு வலிப்பட ஆரம்பித்தார்கள். மாடி வீட்டுக்கு லேடி டாக்டர் வந்தார். அவருடன்

அவருடைய குட்டிப் பரிவாரங்கள் வந்தன.—நர்ஸ், பெட்டி தூக்குபவன், எடுபிடி வேலைக்காரி, இத்தியாதி.

கூரை வீட்டுக்குப் பண்டிதர் வீட்டு மருத்துவக் கிழவி வந்தாள். அவளுக்கு ஒத்தாசையாகப் பன்னிரண்டு பிள்ளைகளைப் பெற்று, இப்போது பாட்டியாக இருக்கும் அம்புலு அம்மாளும் இருந்தாள்.

இரண்டு வீட்டுப் பெண் பிள்ளைகளும் இடுப்பு வலியால் கொஞ்சம் சத்தம் போடத்தான் செய்தார்கள். பணக்காரி இந்தச் சமயத்தில் தன்னுடைய கௌரவத்தையும் மறந்து விட்டுச் சற்று அதிகமாகவே சத்தம் போட்டாள். கூரை வீட்டுக்காரிக்கு அதிக வேதனை தெரியவில்லை போலும்; அல்லது வேதனையைப் பொறுத்துக்கொள்ளும் சுபாவம் அவளுக்கு இயற்கையாகவே ஏற்பட்டிருக்கலாம்.

குழந்தைகள் பிறந்தன. ஞாயிற்றுக்கிழமை சாயங்காலம் ஐந்தேகால் மணிக்கு, அதாவது அந்த இரண்டு வீட்டுக் காரர்களும் சொல்லிக்கொண்டபடி 'சரியான ராகு காலத்தின் மத்தியில்'—இரண்டு குழந்தைகளும் பிறந்தன. ஒரு விநாடி முன் பின் இருக்க வேண்டுமே! கிடையாது. சரியாக ஒரே நேரத்தில் அந்தக் குழந்தைகள் இரண்டும் பிறந்தன. ஒன்று ஆண் பிள்ளை; மற்றொன்று பெண். மாடி வீட்டில் ஆணும், கூரை வீட்டில் பெண்ணும் பிறந்தன.

மாடி வீட்டுப் பையன் பிறக்கும்போதே 'கிளாஸ்கோ' குழந்தை மாதிரி மொத்தமாகக் கன்னக் கதுப்புகளுடன் இருந்தான். கூரை வீட்டுப் பெண் நோஞ்சலாக, ஆனால் கண் கொள்ளா அழகுடனும், கறுத்த தலைமயிருடனும் இருந்தாள்.

## பிள்ளைப் பிராயம்

நம்முடைய நாட்டுப் பழங்கதைகளில் வருகிற கதாநாயக நாயகிகளைப் போல இந்தக் குழந்தைகள் இரண்டு பேரும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தார்கள். பெயர்களைச் சொல்ல மறந்துவிட்டேனே! பையன் பெயர் மலையப்பன். பெண் பெயர் பார்வதி. மலையப்பன் ஹார்லிக்ஸ், கிளாஸ்கோ, கிரைப் வாட்டர், டாக்டரம்மா, டானிக் புட்டி இத்தனை வசதிகளுடன் கொழுகொழுவென்று வளர்ந்தான். தாய்ப் பால் இல்லாத காரணத்தால் குடியானவப் பெண் ஒருத்தி அவனுக்குப் பால் கொடுக்க அமர்த்தப்பட்டாள். பார்வதியிடம் தாய்ப் பாலுக்குக் குறைச்சல் இல்லை. அத்துடன் அரிசிக் கஞ்சி, பசும்பால், குப்பைமேட்டு மருந்துச் செடிகள் அவளுக்கு உதவின. என்றாலும் பார்வதி மலையப்பனைப்போல் திடமாக இல்லை; நோஞ்சலாகவே இருந்தாள். ஒடித்து மடியில் கட்டிக் கொள்ளலாம் என்பார்களே, அந்த மாதிரி இருந்தாள். ஆனால் அழகு என்னமோ அப்படி அவளை விடாப்பிடியாய்ப் பற்றிக் கொண்டு வளர்ந்தது. மல்லிகைக்கொடி தளிரும் பூவுமாய்க் குலுங்கி அசையுமே அப்படி இருந்தாள் இளம் பார்வதி. ஒரு முறை அவளைப் பார்த்தவர்கள், இரண்டாவது முறை திரும்பிப் பாராமல் இருக்க மாட்டார்கள். மனசுக்குள் அவளுடைய உருவத்தை மெச்சாமல் இருக்கமாட்டார்கள். கொள்ளை அழகைத் தன்னிடம் கூடவிட்ட இளஞ் சிறுமி அவள்.

'தடிப்பயல்' மலையப்பனுடைய எடை இருபத்தைந்து பவுண்டு இருக்குமென்றால், அவன் மேலே ஒட்டியிருக்கும் தெருப் புழுதி இரண்டரைப் பவுண்டுக்குக்

குறையாது தடிப்பயல் என்ற பட்டப் பெயரை நான் இடவில்லை அவனுக்கு. அவனுடைய தாயார் ஸ்ரீமதி கங்கை அம்மாளே மனமுவந்து அவனுக்குச் சூட்டியது அது. அந்தத் தெரு முழுவதும் அவனுக்கு அதுதான் பெயர். தடி மலையப்பன் என்றால் எல்லாப் பிள்ளை களுக்கும் உதைப்பு. தாய்மார்களுக்குப் பயம். ஆனால் பார்வதிக்கு மட்டும் குஷி.

சமயா சமயங்களில் இடுப்பில் துண்டு, 'ட்ரௌஸர்' ஒன்றுமே இல்லாமல் கூரை வீட்டுக்குள் குடுகுடு என்று ஓடி வருவான் மலையப்பன். இந்தக் கோலத்தில் அவனைக் கண்டால் பார்வதிக்குப் பிடிக்கவே பிடிக்காது. மூன்று வயசுக் குழந்தைதானே என்பீர்கள் நீங்கள். பார்வதிக்கு என்னமோ பிடிக்காதென்றால் பிடிக்காதுதான்!

"அம்மா, அம்மா! இங்கே பாரம்மா! அந்தத் தடியன் முண்டக் கட்டையா ஓடி வாரானம்மா!—ஆண்பிள்ளைப் பயலுக்கு வெட்கம் வேண்டாமோ?" என்பாள் பார்வதி.

"ஓடிப்போய் ட்ரௌஸர் போட்டுண்டு வாடா ராஜா" என்பாள் பார்வதியின் தாயார் குஞ்சிதம்.

மற்ற எல்லா விளையாட்டுக்களையும் போலவே, கூரை வீட்டுக் கொல்லைப் புறத்தில் அம்மா அப்பா விளையாட்டும் நடக்கும். இந்த விளையாட்டுச் சமயத்தில் மாத்திரந்தான் பார்வதியின் ஜம்பமெல்லாம் மலையப்பனிடம் சாயும். பெட்டிப் பாம்பாய் ஆடுவான். 'போடு தோப்புக்கரணம்' என்று அவள் சொன்னால் 'எண்ணிக்கொள் பரதேவதையே' என்பான். சாமான் வாங்குவது, தொட்டிலை ஆட்டுவது, தண்ணீர் இறைத்துக்கொடுப்பது, விறகு பிளப்பது இப்படி வேலைகளைச் சொல்லி வெட்டி

வாங்கி விடுவாள் மலையப்பனை. 'தலை எழுத்தே எதற்காகடி உன்னைக் கட்டிக்கொண்டேன்' என்று சலித்துக்கொண்டே அப்பா நாடகத்தைத் திறம்பட நடிப்பான். திடீரென்று மத்தியில் 'தடியன்' மனோபாவம் தோன்றிவிட்டால்-(எப்போதாவது ஒரு சமயம்தான் தோன்றும்)-பார்வதியின் கன்னம் பழுத்துவிடும். அதற்கப்புறம், கண்ணீர், தேம்பல், சமாதானம், அவன் சட்டையால் அவள் கண்களைத் துடைத்தல், பிராயச்சித்தமாக அவளிடம் நாலு குட்டுகள் வாங்கிக்கொள்ளல் இத்தனையும் நடைபெறும்.

பார்வதியின் தகப்பனார் திடீரென்று பரலோக யாத்திரை செய்துவிட்டார். அவளுடைய ஜாதகத்தில் அப்படி எழுதி இருந்ததாம். மலையப்பனுக்கும் அதே ஜாதகந் தானே என்று கேட்காதீர்கள். அது ஆண்பிள்ளை ஜாதகம்!

## பள்ளிப் பருவம்

புரட்டாசி மாதம் சரஸ்வதி பூஜையன்று குழந்தைகள் இருவருக்கும் பள்ளிப் படிப்பு ஆரம்பமாயிற்று. வித்தியாரம்ப தினத்தை ஒரு சிறிய கலியாணம்போல் அத்தனை ஆடம்பரமாக நடத்தினார்கள் மாடி வீட்டுக்காரர்கள். பாண்டு வாத்தியங்களென்ன, நாதஸ்வரக் கச்சேரியென்ன, பிளஷர்கார் ஊர்வலமென்ன இப்படி ஏகப்பட்ட தடபுடல். அந்தத் தெருவே அதிசயிக்கும்படியாகத் தடி மலையப்பனின் பள்ளிப் பிரவேசம் நடந்தேறியது.

இந்த அதிர்ஷ்டம் பணக்காரப் பிள்ளையான மலையப்பனுக்கு மட்டிலுந்தான் என நினைக்கவேண்டாம். அதில் சரி பாதிப் பங்கு கூரை வீட்டுப் பார்வதிக்கும் கிடைத்தது. தகப்பனில்லாக் குழந்தை என்ற காரணத்தால் மட்டுமல்லாமல், அவள் மீது இருந்த அளவற்ற பிரியத்தாலும்

மலையப்பனின் தாயார் இந்த வைபவத்தில் அவளையும் சேர்த்துக்கொண்டாள். அவளுக்கென்று தனிப்பட்ட செலவு ஒன்றும் பிரமாதமாக ஆகிவிடாதல்லவா? அப்படி ஆகும் சிறு தொகையையும் குஞ்சிதம் கொடுப்பதற்குத் தயாராக இருந்தாள். பார்வதியை விட்டால் அவளுக்கு வேறு குழந்தை கிடையாது.

கூரையை மடித்துவிட்ட, திறந்த பிளஷர்காரின் பின் மெத்தையில் புத்துடையும் பூமாலையும் அணிந்துகொண்டு 'ஜம்'மென்று மலையப்பனும் பார்வதியும் உட்கார்ந்திருந் தார்கள். அடிக்கடி ஒருவரை ஒருவர் பார்த்துச் சிரித்துக் கொண்டார்கள். "நம்ம ரெண்டு பேருக்கும் கல்யாண மாண்டி; வேலைக்கார முனியன் சொன்னான்; உனக்குத் தெரியுமோ?" என்றான் மலையப்பன் ரகசியமாகப் பார்வதி யிடம். "போடா தடியா? படிக்கப்போறோமடா; கல்யா ணத்துக்கு இப்போ என்ன அவசரமாம்!" என்றாள் பார்வதி.

பார்வதியின் அம்மா கண்களில் ஆனந்தக் கண்ணீர் சொரிய இந்தக் காட்சியைப் பார்த்துக்கொண்டிருந்தாள். கோவிலில் ஆ டி ப் பூ ர த் திருவிழா நடக்கும்போது பரமசிவனும் பார்வதியும் ரதத்தில் எழுந்தருளி வந்தால் இப்படித்தான் இருக்கும். இந்த நினைவு இப்போது குஞ்சிதத்துக்கு வந்தது. இ தை க் கண்டு களிக்க இப்போது 'அவர்' இல்லையே என்ற எண்ணமும் ஒரு புறம் அவளை வாட்டத்தான் செய்தது.

பள்ளிக்கூடத்தில் வருஷா வருஷம் இரண்டு பேரும் வகுப்பு மாறிக்கொண்டே இருந்தார்கள். படிப்பில் மலையப்பன் மண்டு; கெட்டிக்காரி பார்வதி. ஆனால், பணத்தின் மகிமையால் மலையப்பனும் படிப்பின் பலத்

தால் பார்வதியும் சேர்ந்தாற்போல் தேறிக்கொண்டு வந்தனர்.

"எனக்கு இந்தக் கணக்குக் கொஞ்சமும் புரியவில்லை" என்று வீட்டுக் கணக்கை அவளிடம் கொண்டு வருவான் மலையப்பன். நேரமிருக்கும்போது சாவதானமாக உட்கார்ந்து அவனுக்குப் புரியும்படிச் சொல்லிக்கொடுப்பாள் அவள். அவளுக்கு வீட்டில் வேறே வேலைகள் இருந்தாலோ, அல்லது அவனுக்குப் பத்துத்தரம் சொல்லிக் கொடுத்தும் தெரியாவிட்டாலோ "இந்தா, இதைப் பார்த்துப் போட்டுக்கொள்" என்று தன்னுடைய நோட்டைக் கொடுப்பாள். சந்தோஷமாகக் காப்பி யடித்துக்கொண்டு போவான் மலையப்பன்.

படிப்பில் மட்டுந்தான் மண்டுவே தவிர, மற்ற ஆட்டம், ஓட்டம், விளையாட்டு எல்லாவற்றிலும் தேர்ந்தவன் மலையப்பன். தவிரவும் அழகாகப் படங்கள் போடுவான். உபாத்தியாயர்களைப்போல, பள்ளிப் பிள்ளைகளைப்போல, அம்மா அப்பாவைப்போல எல்லாம் போட்டு விடுவான். அடிக்கடி பார்வதியைப் போலவும் அழகாகப் போடுவான். அவன் போட்ட படங்களில் அநேகமானவை பார்வதி யினுடையவைதாம். பாலர் பத்திரிகைகளில் அநேகம் பத்திரிகைகள் அவனுடைய படங்களுடன் வந்தன. அவனுக்குப் பரிசுகளுக்கும் குறைவில்லை.

எட்டாவது தேர்ந்தவுடன் பார்வதியின் படிப்பு முடிந்தது. அவள் அதற்கு மேல் படிக்காததில் மலையப்ப னுக்கு மிகவும் வருத்தம். பார்வதிக்குக்கூட வருத்தந் தான். ஆனால் இவர்களுடைய வருத்தத்தைக் குஞ்சிதம் கொஞ்சமும் சட்டை செய்வதாக இல்லை. ஒருநாள் குஞ்சிதம் மலையப்பனைக் கூப்பிட்டு, "நீ இனிமேல் முன்

மாதிரி இங்கே அடிக்கடி வரப்படாதடா ராஜா, பார்வதிக்கு வயசாகி விட்டதில்லையா?'' என்றாள்.

ஒரு முள் இதைக் கேட்டவுடன் சுரீரென்று மலையப்பனின் நெஞ்சுக்குள் பாய்ந்தது. இனி இங்கே வரப்படாதாம்! பார்வதியுடன் பேசக்கூடாதாம்! அவளுக்கு வயசாகி விட்டதாம்! வயசாகி விட்டால் என்ன? பதினைந்து வருஷத்து உறவைக் குலைக்க இந்த வயசுக்கு என்ன அதிகாரம்?

அன்றிலிருந்து அவன் கூரை வீட்டுக்குள் நுழைவதில்லை. ஆனால் அவன் கண்கள் மட்டிலும் ஏனோ எந்நேரமும் இந்தப் பக்கமே அலைந்து கொண்டிருந்தன.

## வசந்த காலம்

இதுவரையில் ரயில்வே தண்டவாளமே போல் இருவருடைய வாழ்வின் பாதையும் ஒன்றாகவே போய்க் கொண்டிருந்தது. இனிமேல் அப்படிப் போகாது. அது காலத்தின் கோளாறு; வசந்தகாலம் ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒன்றைப் போலவே இருப்பதில்லை; தண்டவாளத்தைப்போல் ஒன்று போனால் இன்னொன்று கிராமாந்தரத்தின் மாட்டு வண்டிப் பாதையைப்போல் மேலும் கீழும், சுற்றி வளைத்துக்கொண்டும், கல்லிலும் மண்ணிலும் போகும். ஆகையால் ஒவ்வொரு சமயம் நாம் ஒவ்வொரு பாதையில் போகவேண்டியிருக்கும்.

''பார்வதிக்கு எப்போது கல்யாணம் பண்ணப் போகிறாய்?'' என்று குஞ்சிதத்திடம் கேட்டாள் மலையப்பனின் தாயார்,கங்கை அம்மாள்.

"நம்முடைய கையிலா இருக்கிறது? அவள் தலை எழுத்து எப்படியோ? இன்னும் ஒரு வரனும் நிச்சய மாகவில்லை" என்றாள் குஞ்சிதம்.

"இந்தக் காலத்தில் அதிகநாள் சிறிசுகளை வீட்டில் வைத்திருக்கப்படாது. நீயோ புருஷனில்லாதவள். நீட்டுப் போக்குப் பார்க்காமல் காலா காலத்தில் எவனிடமாவது தள்ளிவிடு" என்றாள் கங்கை.

மலையப்பனும் இதைக் கேட்டுக் கொண்டுதான் இருந்தான். அவன் அப்போது சிறு பிள்ளை. பள்ளிக் கூடத்து மாணவன். ஆனால் அவனைப் போலவே வயசாகியிருந்த பார்வதி 'பெரிய மனுஷி' ஆகிவிட்டாள்! சிறு பிள்ளையான மலையப்பனுக்கு இந்தப் பேச்சைக் கேட்டபோது கொஞ்சம் ரோஷம் வந்தது.......... பார்வதியை எவனிடமாவது தள்ளிவிட வேண்டுமாமே!

பெண் பார்க்கப் பல மனிதர்கள் கூரை வீட்டுக்கு வந்து வந்து போனார்கள். வருகிறவர்கள் முன்னெல்லாம் பார்வதி உட்கார்ந்து பாடிக் காட்டினாள். வருகிறவர்களை யெல்லாம் பார்வதி தலை குனிந்து நமஸ்கரித்தாள். இதை யெல்லாம் எதிரகத்தில் இருந்து கவனித்த மலையப்பன் பல்லைக் கடித்தான். வந்து போகும் மனிதர்களைக் காண அவனுக்கு வெறுப்பாக இருந்தது. மனிதத் தன்மை இல்லாதவர்களாகத் தெரிந்தது.—எல்லோரும் பண விஷயத்தில் ஒருமுடிவுக்கு வராமல்தான் சென்றார்கள் என்பதை அவன் அறிந்துகொண்டான். பணத்தோடு ஒப்பிடக் கூடியதா அவள் அழகு, அவள் குணம், அவளுடைய தன்மை?— அவளைப் பற்றி யாருக்காவது கொஞ்சமாவது தெரியுமா? மலையப்பனுக்குத் தெரிந்த அளவில் நூற்றில் ஒரு பங்கு தெரிந்தால் அவர்கள் அப்படிப் போவார்களா? —பணம் நாசமாய்ப் போக!

கடைசியில் ஒரு வரன் நிச்சயமாயிற்று. காற்றாடிபோல் ஒரு மனிதர் அவளை மணக்க முன் வந்தார். மறுதாரக் காரர். நாற்பதுக்குக் குறையாத வயசு இருக்கும். இருந்தாலும் பண விஷயத்தில் அவ்வளவாக அவர் விட்டுக் கொடுக்கவில்லை. எப்படியோ அந்தக் கூரை வீட்டை விற்றுக் கல்யாணம் செய்ய வேண்டியதாயிற்று. மலையப்பனின் தகப்பனாரே அதை ஐந்நூறு ரூபாய்க்கு வாங்கிக் கொண்டார். மேலும் அதே வீட்டில் வாடகைக்கு இருக்கச் சுதந்திரத்தை அனுமதித்தார்.

ஒரு சுபயோக சுபதினத்தில் கல்யாணம் மங்களகரமாக நடந்தேறியது. மாப்பிள்ளை தலைமயிருக்குக் கறுப்புச் சாயத்தை அதிகமாகக் கல்யாணத்தன்று உபயோகப்படுத்தியிருந்தார். கல்யாணத்திற்கு மலையப்பனைப் போகச் சொன்னார்கள் அவன் பெற்றோர்கள். அவன் போகவில்லை. அன்றொரு நாள் பார்வதியின் தாயார் கூறிய சொல் அவனுக்குக் குறுக்கே நின்றது.

கல்யாணம் முடிந்து புக்ககத்துக்குப் போனபின் பார்வதி தாயார் வீட்டிற்கு வந்திருந்தாள். அப்போது அவள் தாயார் வீட்டில் அதிகமாகத் தங்கவில்லை; பொழுதெல்லாம் பெரும் பகுதி மாடி வீட்டில்தான் தங்கினாள். பள்ளியிலிருந்து திரும்பி வந்த மலையப்பனிடம் தானாகவே சென்று அரட்டை அடித்தாள். அவன் வெட்கப்படுவதைக் கண்டு கலகலவென்று சிரித்தாள். "என்ன மலையப்பா, கூச்சம் உனக்கு? புதுப் பெண்ணைப்போல என்னைக் கண்டால் ஓடி ஒளிந்து கொள்கிறாயே!" என்றாள்.

"வெட்கமா?.... இந்த இரண்டு வருஷமாய் ஒரு பேச்சைக் காணோமாம்; இப்போ மட்டிலும் திடீரென்று

உன்னிடம் என்ன பேச்சாம்! உன் அம்மா என்னை அங்கே வரவேண்டாம் என்றதை மறந்து விட்டாயோ?'' என்று கோபத்துடன் கேட்டான்.

''அட அசடே! அதெல்லாம் கல்யாணத்திற்கு முந்தி அப்படித்தான் சொல்வார்கள். இப்போ அவளுக்குக் கல்யாணம் ஆகிவிட்டதல்லவா? இனிமேலும் உன்னைக் கண்டால் ஒளிந்துகொள்ளச் சொல்கிறாயா?'' என்று குறுக்கிட்டாள் மலையப்பனின் தாயார்.

பார்வதி ஊருக்குப் புறப்படும்போதுதான் அவளுக்கு மூன்று மாசம் என்பதைக் குஞ்சிதம் கங்கையிடம் சொல்லிக்கொண்டிருந்தாள்.

திரும்பவும் ஏழாவது மாதத்தில் பார்வதி வந்தாள். ஒரு பெண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். தங்கப்பதுமை போன்ற அதைத் தூக்கிக்கொண்டு ஊருக்குப் புறப்பட்டாள்.

## ஆடிக் காற்று

பார்வதி குழந்தையுடன் ஊருக்குப்போய் மூன்று மாதங்கள் கூட ஆகவில்லை. அவளிடமிருந்து ஒருநாள் தாயாருக்குத் தந்தி வந்தது. அதை எடுத்துக்கொண்டு மாடி வீட்டுக்கு ஓடிவந்தாள் குஞ்சிதம். மலையப்பனிடம் கொடுத்துப் படிக்கச் சொன்னாள். தந்தியைப் பிரித்த மலையப்பனின் முகம் பிரேதமாக வெளுத்தது. ''பார்வதியின் புருஷன் போய்விட்டார்!'' என்றான் நிதானமாக. அங்கேயே விழுந்துவிட்டாள் குஞ்சிதம். பிறகு நினைவு வந்தவுடன் புறப்பட்டாள்.

ஒரு மாதம் கழித்துப் பார்வதியை உடனழைத்துக் கொண்டு திரும்பினாள் குஞ்சிதம். பார்வதியுடன் அவள் பெண் குழந்தையும் வந்தது; கண்களிலே உயிரை

வைத்துக்கொண்டிருந்தது சோனிக்குழந்தை. அந்தத் தெருவே கூடிப் பார்வதிக்காக அழுதது. அழுது என்ன பயன்? அழுகைக்குப் பின் துர் அதிர்ஷ்டம் பிடித்த பெண்ணென பார்வதியைத் திட்டிக்கொண்டே கூட்டம் கலைந்தது. பார்வதியின் ஜாதகம் நல்லதாயிருந்தால் அந்த மனிதன் இப்படி உயிரை விடுவானு!

பார்வதி அவளுடைய கூரை வீட்டில் இருந்தாள். மலையப்பன் அவனுடைய மாடி வீட்டில் இருந்தான். எதிர் வீட்டுக்காரியான அவளுக்கும் மலையப்பனுக்கும் மத்தியில் ஒரு கனத்த திரை விழுந்து விட்டது. பயங்கர மான வலிமை பொருந்திய, பாழுந்திரை அது.

எந்நேரமும் மலையப்பனின் கண்கள் அந்தப் பக்கமே அலையத் தொடங்கின. இப்போது அவள் இருக்கும் அலங்கோல நிலையை அவன் பார்த்தான். அவளுக்குப் பூ இல்லை; பொட்டில்லை; நகை இல்லை; வளையல் இல்லை. அவள் சரியாகத் தலைவாரிக்கொள்வதுகூட இல்லை. அவள் சன்னியாசினி போன்ற கோலத்தில் இருந்தாள். நல்ல வேளை; காலம் முன்போல மிக இருண்டதாக இல்லை. இருந்திருந்தால் அவள் தலைமயிர் கழிக்கப் பட்டிருக்கும். ஒற்றை வெள்ளைத் துணி அவளுடைய மடிந்துபோன அழகைச் சுட்டிக்காட்டிப் பேய்ச் சிரிப்புச் சிரித்துக் கொண்டிருக்கும். — அவளுக்கு இப்போது பூவில்லை; பொட்டில்லை; மஞ்சள் இல்லை; குங்குமம் இல்லை; நல்ல உடை இல்லை; உண்மைதான். ஆனல் அவளுக்கு வயசு இருந்தது; பருவம் இருந்தது; நெஞ்சு இருந்தது; நினைக்கும் சக்தியும் இருந்தது; சிந்தக் கண்ணீரும், பெருமூச்சு விடத் தனிமையும், எண்ணி எண்ணிப் புண்ணுகை நீண்ட பொழுதும் அவளுக்கு ஏராள மாக இருந்தன.

அவளுக்கு இருந்த ஒரே ஆறுதலான அந்தச் சிசுவும் ஒருநாள் தாயை விட்டுத் தகப்பன் போன இடத்தை நாடியது.

இப்போது அந்தக் கூரை வீட்டில்—வாடகை வீட்டில்—இரண்டு விதவைகள் இருந்தார்கள். தாய் ஒருத்தி; பெண் ஒருத்தி. ஐம்பது வயசான தாய்; இருபது வயசு கூட ஆகாத பெண். இருவரும் பூமிக்குப் பாரமாய், உலகிற்கு நஷ்டமாய், தங்களுக்கும் பிறருக்கும் துன்ப மளிக்கும் உயிர்களாய் அங்கே இருந்தார்கள். உயிரும் உணர்வும் அற்ற சடமாக நடமாடினார்கள்.

கதையை நான் இத்துடன் தான் முடித்திருக்க வேண்டும். ஒரே தெருவில் எதிர் எதிர் வீட்டில் ஒரே வேளையில் பிறந்த இருவர்களது கதை இது. இதில் பெண்ணின் கதை முடிந்து விட்டது. இருபது வயசுக்குள் அவள் பெரியவளானாள்; கல்யாணம் செய்துகொண்டு மனைவி என்ற பெருமையுடன் புருஷன் வீட்டை அலங் கரித்தாள். ஒரு செல்லக் குழந்தைக்கும் தாயானாள்...... புருஷனை இழந்தாள்; அனைத்தும் இழந்தாள்; தாய் வீடு திரும்பினாள்; குழந்தையையும் பறி கொடுத்தாள்.

இனி அவளும் தாயும் எங்காவது உறவினர் வீட்டுக்குப் போய்ப் பாரமாக இருக்கலாம். அல்லது படித்து உபாத்தி யாயினியாகவோ, நர்ஸாகவோ போய்ப் பார்வதி சேவை செய்யலாம். ஆனால் அவள் பெண். அவளுடைய பெருங்குறை அவள் உள்ள மட்டும் தீரப்போவதில்லை. தீராத குறை உடைய அவள் யாருக்கும் எவ்வித உருப்படி யான உதவியும் செய்ய முடியாது.

பெண் செடி மளமளவென வளர்ந்து, பூச்சொரிந்து, மகரந்தத்தில் மயங்கிக் கனி குலுங்கி, வெகு சீக்கிர

மாகவே காய்ந்து, இலை உதிர்ந்து, பட்டுப் போகும் நிலைக்கு வந்துவிட்டது. ஆனால் அதன் பக்கத்தில் உள்ள ஆணுக்கோ இனிமேல்தான் உலகம் இருக்கிறது; வாழ்வு இருக்கிறது; இன்பம் இருக்கிறது.

## முடிவுக்குப் பின்

'நடிப்பயல்' என்று பிறந்தவுடனேயே பெயர் வாங்கின மலையப்பன்தான் இந்தக் கதையின் முடிவுக்குக் குறுக்கே நின்றவன். அவன் குறுக்கிடாவிட்டால் இது முன்பே முடிந்திருக்கும். தடித்தனம் என்று மற்றவர்கள் சொல்லும்படியாக அவன் ஒரு காரியம் செய்துவிட்டான்.

குஞ்சிதம் வெளியே போயிருக்கும் சமயம் பார்த்து அவன் ஒருநாள் பார்வதியின் வீட்டுக்குள் நுழைந்தான். மலையப்பனின் வரவு கண்டு பார்வதி திடுக்கிட்டு எழுந்து நின்றாள். "வா, நாழியாகிறது; கொல்லைக் கிணற்றருகே வா; உன்னிடம் ஒன்று பேசவேண்டியிருக்கிறது" என்றான்.

"அங்கே எதற்காக வரவேண்டும்? இங்கேயே சொல்லேன்" என்றாள் பார்வதி.

"வருவாயா, முடியாதா?" என்றான்.

"முடியாது!"

கையைப் பிடித்துப் பரபரவென்று இழுத்துக்கொண்டு போனான். கிணற்று மேட்டில் செடிப் பத்தைகளை ஒட்டி அவளை உட்கார வைத்தான். அவளிடம் மூச்சு விடாமல் என்னென்னமோ அவசரமாகக் கூறினான்.

"முடியாது; முடியவே முடியாது!" என்று கத்தினாள் பார்வதி.

"கத்தாதே!-முடியாது என்று இன்னொருதரம் சொன்னால் உன்னை இந்தக் கிணற்றுக்குள் பிடித்துத் தள்ளிவிடுவேன், தெரியுமா" என்றான்.

"தள்ளேன்; தாராளமாகத் தள்ளு ......இந்தா, தள்ளு; எனக்கும் அதுதான் வேண்டும்" என அவனருகில் வந்தாள்.

"தள்ளிவிட்டுச் சும்மா இருக்கமாட்டேன்; நானும் விழுவேன். இது பொய்யில்லை! சரியா? உன் கண்ணாலேயே நான் விழுவதைப் பார்க்கப் போகிறாய்" என்றான், அவள் கையை மெல்லப் பிடித்துக்கொண்டே.

மடை திறந்த கண்ணீர் வெள்ளத்துடன் அவள் அவனை ஏறிட்டுப் பார்த்தாள். அவனும் பார்த்தான். "நான் முடிவு செய்துவிட்டேன். இனிமேல் பின் வாங்கப் போவதில்லை. சொல்!" என்றான்.

"சரி."

பார்வதியின் தாயார் அவளைக் கூப்பிட்டுக்கொண்டே கிணற்றருகில் வந்தாள். நாலு எட்டில் ஓடிப்போய்க் குட்டிச்சுவரைத்தாண்டி மறைந்துவிட்டான் மலையப்பன்.

மறுநாள் முதல் அந்த ஊரில் இருவரையும் காண வில்லை. வடக்கத்திப் பத்திரிகை ஒன்றில் அவன் போடும் படங்கள் வெளிவருகின்றன. பார்வதியின் தாயாரைக் கண்டபடி பேசி வீட்டைவிட்டுத் துரத்திவிட்டார்கள் மலையப்பனின் பெற்றோர்கள். குஞ்சிதம் கண்ணீரும் கம்பலையுமாய், இருந்த சாமான்களையெல்லாம் விற்று விட்டு, பத்திரிகை நடக்கும் அந்த ஊருக்கு ஒரு டிக்கட் வாங்கிக்கொண்டு ரயிலில் ஏறி உட்கார்ந்தாள். ★